

பிதாத்வம் மாதா த்வம் தயிததநயஸ்த்வம் ப்ரியஸுஹ்ருத்
த்வமேவ த்வம் மித்ரம் குருரஸி கதிச்சாஸி ஜகதாம்
த்வதியஸ்த்வத்ப்ருத்யஸ்தவ பரிஜநஸ் த்வத்கதிரஹம்
ப்ரபந்நச்சைவம் ஸத்யஹமபி தவைவாஸ்மி ஹி பர:

"உலகங்கட்கெல்லாம் தகப்பனும் நீயே, பெற்றதாயும் நீயே, அனபுமிக்க பிள்ளையும் நீயே, உயிர்க்காக்கும் நண்பனும் நீயே, மனம்விட்டு பேசுதற்கு உரிய மித்திரனும் நீயே, ஆசாரியனும் நீயே, உபாயமும் உபேயமும் நீயே. அடியவனான நானோ உன்னுடையன், உன்னாலே காப்பாற்றப்படவேண்டியவன், உனக்கு அடிமையானவன். உன்னையே கதியென இருப்பவன். பிரபன்னனாகவும் இருக்கின்றேன். என்னை காத்திடும் பொறுப்பும் உனக்கு உள்ளது. (ஆகவே உன்னையே நான் புகலாக கொண்டுள்ளேன்.)

(ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்நம்-60)



# ஸப்தகிரி

ஜூலை - 1996

தனிப்பிரதி ரூ. 4 வருடச்சந்தா ரூ. 48/-
மலர் 27 இதழ் 2





பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீ ஆளவந்தார் - சித்திரம் - கே. ஜெகதீஷ்

முதல் உள்ளட்டை : ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீசுந்தர ராஜசுவாமி, திருச்சானூர்.

2-வது உள்ளட்டை : ஸ்ரீ ஆனிவார ஆஸ்தானம் - திருமலை

பின்னட்டை : ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில் - ஸ்ரீநிவாசமங்காபுரம்

JAGADISH

## உங்களுடன்.....

இந்து சமயத்திற்குப் பெருமை சேர்ப்பன வேத உபநிடதங்களா, புராண இதிஹாஸங்களா, மெய்யடியார்களின் பனுவல்களா, அப்பனுவல்களை விளக்க எழுந்த ஆசார்ய பெருமக்களின் விளக்க உரைகளா என்று கேள்விகளைக் கேட்டுக் கொண்டே போனால் 'யாவருமே' 'எல்லாமே' என்றுதான் பதில் வரும். மயில் அழகுதான். அதிலும் மாரிக்காலத்து அதன் நடனம் தனி நளினம்தான். அதன் சிறப்பு கருதிதானே அந்த மால்மருகனும் அதனை தன் வாகனமாகக் கொண்டான். அதற்குப்புனிதமும் சேர்ந்தது. ஆனால் அம்மயில் ஓர் மலையுச்சியில் நடனமாடினால், கண்ணும் சிந்தனையும் பெற்ற மனிதர்க்கு என்ன பயன்? மலையுச்சியில் தேங்கிடும் மடுநீரால் பயனேது மற்றவர்க்கு? அது வழிந்தோடி மண்மீது பாய்ந்தோடினால்தான் அது பல உயிர்களின் பசியினைத் தீர்த்திடும் அமுதமாகத் திகழ்ந்திடும். அந்த மயிலும், அருவியும் போன்றே ஒலிவடிவில் மட்டுமே இருந்திட்ட வேதங்களும், ஒருசாரார் மட்டுமே பயன்பெற்ற கீதைபோன்ற தத்துவ உபதேசங்களும் ஒரு காலத்தில் திகழ்ந்திட்டன. ஆனால் பின்னர் வந்த மெய்யடியார்களின் பாடல்களும், அப்பாடல்களை விளக்கிய ஆசார்ய பெருமக்களின் வியாக்யானங்களும் அவற்றை மண்ணில் மாந்தர் அறிந்து தெளிந்து இன்புறும் வகையில் செய்திட்டன. ஆம், மரத்தின் உச்சியில் பழுத்த பழமாக இருந்திட்ட வேத, உபநிடத, புராண, தத்துவ உபதேசங்களை வேர்ப்பலாவாக எளிமையாக்கினர் மெய்யடியார்கள். அந்த வகையில் வைணவ சமயத்தில் ஆழ்வார்களின், ஆசார்ய பெருமக்களின் பங்கு போற்றத்தக்கதாக, மகத்தானதாக விளங்குகிறது. அதிலும் ஆசார்ய பெருமக்களின் உரைவளத்தால் மட்டுமே ஆழ்வார்களின் உள்ளக்கிடக்கையை, தத்துவ சிந்தனையை, உவமை நயத்தினை, பொருட்பொலிவினை நாம் அறிந்து பயனுற முடிந்தது என்றே கூறவேண்டும். குன்றின் மீது ஏற்றிட்ட 'வைணவ' விளக்கினை, நம் வீட்டு முற்றத்திற்குக் கொணர்ந்த பெருமையும், சிறப்பும் ஆசார்யர்களுக்கே உரித்தாகும்.

புனிதமானதும் பயனுள்ள பிறவிகளில் உயர்ந்து நிற்பதுமாகிய மனிதப் பிறவிக்குத் தேவையானது நல்லோர் இணக்கமும், நல்ல ஆசார்யனைக்கொண்டு விளங்குவதுமாகும். "பரம்பொருள் பேருண்மை" எனும் தேங்காயைப் பறிக்க வேண்டுமென்றால்,

ஆழ்வார்கள் எனும் தென்னை மரத்தில் ஏறத்தான் வேண்டும். அவ்வாறு ஏறமுடியாதவரக்ளுக்கு உதவிடும்வகையில், அம்மரத்தில் சாய்ந்துள்ள உயர்ந்த ஏணியாக ஆசார்ய பெருமக்கள் விளங்குகின் றனர். அத்தகு பெருமைமிகு ஆசார்ய பெருமக்களின் பட்டியலில் தனக்கென ஒரு தனியிடத்தைப் பெற்றவர் ஆளவந்தார் எனும் யாமுனாசார்யாராவார். அருள் நெறியின் ஆற்றலையும், தொண்டு மனப்பான்மையின் பெருமையினையும், அன்பின் அருமையினையும், ஆழ்வார்பால் கொண்ட ஈடுபாட்டினையும், வைணவத்தின்பால் கொண்ட தீராக்காதலையும் தன்படைப்புகளில் தெள்ளத்தெளி வாக விளக்கிய ஆளவந்தார் உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி ஆகியோர் வழியில் நின்று நாதமுனிகளின் மீது கொண்ட பக்தி மூலம் 'ஆசார்யர்' எனும் நிலைக்கு ஓர் இலக்கணத்தை வகுத்து, விசிஷ்டாத்துவைத கொள்கைக்கு ஓர் ஆரம்ப பாதையினை வகுத்திட்டார் என்றால் அது மிகையாகாது.

ஆம், விசிஷ்ட்டாத்துவைதம் எனும் பெருமாளிகையை ஸ்ரீஇராமானுஜர் எழுப்பினார் என்றால், அம்மாளிகைக்கு ஸ்ரீமந் நாதமுனிகள் அடிக்கல் நாட்டினார் என்றால், அம்மாளிகைக்கு அடித்தளமாக ஆளவந்தார் அமைந்தார் என்பதே பேருண்மையா கும். தென்னகத்தில் சங்கரரின் அத்வைதக்கொள்கை வேரூன் றித் தழைத்தோங்கிய காலக்கட்டத்தில், அத்தென்னகத்தில் தனது பதினாறு சிஷ்யர்களுடன் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தினைக் காலூன்ற வழிவகுத்த பெருமை ஆளவந்தார்க்கே சேரும். வேத உபநிடத உன்னதக் கருத்துக்களைத் தெளிந்து, ஆழ்வார்களின் அருமைப்பாசுரங்களில் பொதிந்துள்ள வைணவக்கொள்கையினை உணர்ந்து, வைணவ சமய மறுமலர்ச்சிக்கு வழிகோலும் வகை யில் தன் படைப்புகளின் மூலம் அறிவுப்பூர்வமான விளக்கங்களைத் தந்திட்ட ஆளவந்தார் உண்மையிலேயே அப்பரமனின் திருவுள்ளத் தையும், அடியார்களின் மனதையும் ஆளவே செய்தார். அத்தகு ஆற்றல்பெற்ற அன்பு நெறியாளரான ஆளவந்தாரின் 1080-ஆவது பிறந்தநாளை இவ்வைணவ உலகம் ஒரு பொன்னாளாகக் கொண் டாடி மகிழ்கின்றது. அதில் 'ஸப்தகிரி' தானும் பங்கேற்றிடும் வகையில் இவ்இதழை 'ஆளவந்தார் சிறப்பிதழாக' வெளிக்கொண ருவதில் பெரிதும் உவகை அடைகின்றது. அறிஞர் பெருமக்களின் பொருள் பொதிந்த கட்டுரைகளைத் தாங்கிவரும் இவ் இதழை ஆளவந்தார்க்கே அர்ப்பணிப்பதில் 'ஸப்தகிரி' அகமகிழ்கின்றது.



# செய்திச் சுருக்கம்

## திறப்புவிழா

ஆந்திரமாநில முதல்வர் திரு. என். சந்திரபாபு நாயுடு அவர்கள் திருப்பதிக்கு அருகே உள்ள வி. கோட்டா எனும் ஊரில் ரூ. 40 இலட்சம் செலவில் கட்டப்பட்ட தி.தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபத்தினை 22-6-96 அன்று திறந்துவைத்தார்.

* * *

## ஓய்வு

தி.தி. தேவஸ்தானத்தில் சிறப்புநிலை உதவி செயலாட்சித் தலைவராக பணிபுரிந்த திரு. பி. வாசுதேவன் அவர்கள் 31-5-96 அன்று பணியிலிருந்து ஓய்வு பெற்ருர்.

* * *

தி.தி. தேவஸ்தான அச்சக மேலாளராக பணிபுரிந்த திரு. பி. மோகன்ராவ் அவர்கள் 31-9-96 அன்று ஓய்வு பெற்ருர். அச்சகத்தில் அச்சுக்கோப்பாளர் பணியில் சேர்ந்து தன் உழைப்பாலும், முயற்சியாலும் மேலாளராக பதவி உயரவு பெறறது குறிபபிடததககதாகும்.

* * *

## புதிய தலைவர்

ஆந்திர மாநில அரசின் வருவாயததுறையின் முதனமை அலுவலரான திரு. ஜே. ராமபாபு அவர்கள தி.தி. தேவஸ்தானத்தின் பொறுபபாணமைக குழுத்தலைவராக 30-5-96 அன்று திருமலைககோயில சனனதியில பதவி உறுதி பிரமாணம் மேறகொண்டார். அதே நாளனறு ஆந்திரமாநில அரசின் அறநிலையததுறையின் ஆணையர் திரு. என. நரசிம்மாராவ் அவர்கள் மேற்படிக் குழுவின் அலுவல்சாரா உறுப்பினராக பதவி ஏற்ருர்.

* * *

## புதிய திருமணமண்டபங்கள்

ஆந்திரமாநிலம் நிஜாமாபாத் மாவட்டத்தில போதான, வாரனி, மன்ஸ்வாடா ஆகிய இடங்களில் முறையே ரூ. 26.50 இலட்சம், ரூ. 13 இலட்சம், ரூ. 13 இலட்சம் செலவில் தி.தி. தேவஸ்தானத்தாரின் புதிய திருமண மணடபஙகளை ஆநதிர மாநில அறநிலையததுறை அமைச்சர் திரு. சிமமாதரி சதய நாராயணு அவர்களால 17-6-96 அனறு திறநது வைககபபட்டன.

* * *

## புதிய அபிஷேகம்

திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கோவிநதராஜ சுவாமி கோயில் உத்ஸவ மூர்த்திகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் ஆஷாட மாதததில் ஜேஷ்ட்ட நட்சத்திரததில 'அபிதேயக அபிஷேகம்' நடத்துவதெனறு மேலாண்மை முடிவு செய்துள்ளது.

* * *

### அறிவிப்பு

'ஆளவந்தார்' சிறப்பிதழாக வெளிவரும் காரணத்தால் இவ் இதழில் தொடர்கட்டுரைகளை வெளியிடவில்லை. அவை தொடர்ந்து அடுதத இதழிலிருந்து பிரசுரிக்கப்படும்.

—ஆசிரியர்



ஆந்திரமாநில ஆளுநர் திரு. கிருஷ்ணகாந்த் அவர்கள் தம் துணைவியாருடன் திருமலைக்கு வந்தபோது

# எதிகட்கிறைவனும் யமுனைத்துறைவனும்

'எதிகட்கிறைவன் யமுனைத்துறைவன் இணையடி யாம் கதிபெற்றுடைய இராமானுசன்' என்று திருவரங்கத்த முதனார் துறவியர்தலைவனை இராமானுசனைப் போற்றுகிறார். (இரா.நூற்.21) யமுனைத்துறைவன் என்பது 'பெரிய முதலியார்' என்று போற்றப்படும் நாதமுனியின் பேரனான யாமுநமுனிவரைச் சொல்வது. நாதமுனி பிறக்கப்போகும் தன் பேரனுக்கு யமுனைத்துறைவன் எனும் ஸ்ரீகிருஷ்ணனது பெயரை இட்டருளினார். வைணவ உலகம் இவரை ஆளவந்தார் என்றே அன்புடன் அழைக்கிறது. ஆளவந்தாரும் பின்னர் துறவறம் பூண்டார். றேன்" என்று இதற்குப் பொருள். இராமாநுஜர் ஆளவந்தாருடன் ஸமகாலத்தவராயினும் அவரை நேரில் கண்டு வணங்கி உரையாட வாய்ப்பே இல்லாமல் போயிற்று. எனினும் எதிராஜர் யமுனைத்துறைவரைத் தனது நேர்முக ஆசாரியனாகவே கருதினார். தாமருளிச்செய்த நூல்களிலெல்லாம் முகப்பில் ஆசார்ய வந்தநமாக யாமுனரைத்துதிக்கும் ச்லோகங்களையே அமைத்தார். "ஒரு நாளாவது ஆளவந்தாருடன் கூடியிருந்தேனாகில் பரமபதத்துக்குப் படிகட்டியிருப்பேன்" என்று இவர் ஒரு சமயம் அருளிச்செய்தாராம். யாமுனரிடம் ராமாநுஜருடைய குருபக்தி அப்படிப்பட்டது. புரம் வந்தார். வரதராஜப் பெருமாள் கோயில் வெளிச் சுற்றில் யாதவனுடன் மற்ற சிஷ்யர்களுடன் கூடி வரக் கண்டார். தனித்து அழைத்துப் பேச்சுக்கொடுக்க வாய்ப்பு கிடைக்க வில்லை. இளையாழ்வாரைக் குளிரநோக்கி, "ஆமுதல்வன் இவன்" என்று ஆழ்வார் திருவாக்காலே ஆசீர்வதித்து, கச்சிப்பேரருளாளனை அடிபணிந்து "இவரை தம்மையடுத்து வைணவருக்கெல்லாம் சமயத் தலைவராய் உருவாக்க வேண்டும்" என்று அப்பெருமானைச் சரணம்பற்றி வேண்டிக் கொண்டு தம்மூர் சென்றார்.

சில ஆண்டுகளுக்குப்பின்னர் யாமுனர் பெரியநம்பி எனும்

பேராசிரியர் டாக்டர் V.V. ராமாநுஜன் - சென்னை.

ஆதலால் எதி (துறவி) கட்கிறைவன் என்று போற்றப்படுகிறார். இப்பெயர் இராமானுசனுக்கும் நன்கு பொருந்தும். யதீந்த்ரன், யதிராஜன் என்றெல்லாம் அழைக்கப்படுமவரிவர்.

யத்பதாம் போருஹத்யாந வித்வஸ்தா
ஶேஷகல்மஷ: ।
வஸ்துதாமுபயா தோஹம் யாமு
நேயம் நமாமிதம் ।।

என்ற ப்ரஸித்தமான ச்லோகம் ராமாநுஜரால் ஆளவந்தாரைப் போற்றி இயற்றப்பட்டது. "எவருடைய திருவடித்தாமரைகளை தியானிப்பதால் யான் எல்லா தோஷங்களும் நீங்கப் பெற்று 'ஒருபொருள்' என்று நிலைபெற்றேனோ அந்த யமுனைத்துறைவரை வணங்குகி ராமாநுஜர் 'இளையாழ்வார்' என்ற பெயருடன் யாதவப்ரகாசருடன் என்ற வித்வானுடைய வேதாந்தபள்ளியில் மாணவனாக இருந்தபோது குருவுக்கும் சீடருக்கும் வேதாந்த வாக்யங்களுக்குப் பொருள் கூறுவதில் கருத்துவேற்றுமை இருந்தது. யாதவன் சங்கராசாரியரின் அத்வைதக் கோட்பாட்டைச் சேர்ந்த வித்வான். அவர் கற்பித்த பொருள்கள் சில இவர் மனதுக்கு இசையவில்லை. அதை குருவிடம் நேரே சொல்லும் மநோதிடம் இவருக்கிருந்தது. இதையெல்லாம் கேள்விப்பட்ட யாமுனர தமதூரான திருவரங்கத்தினின்றும் இளையாழ்வாரைக் காணபதற்காக காஞ்சீ பெரியாரை இளையாழ்வாரை அழைத்துவரும்படி அனுப்பினார். அவர் இளையாழ்வார் பெருமாளுக்குத் திருவாராதந தீர்த்தம் கொண்டு வரும் வழியில் நின்று ஆளவந்தார் (யாமுனர்) அருளிய ஸ்தோத்ர ரந்ந ச்லோகங்களை இவர்காதில் படும்படி சொல்லிக்கொண்டிருந்தார். அவற்றை செவியுற்ற இளையாழ்வார் நம்பியை வணங்கி, "தேவரீர் அநுஸந்திப்பது எந்த மஹாநுடைய திருவாக்கு. அந்த மஹநீயரை அடியேன் கண்டு வணங்கவேணும்" என்று விண்ணபபம் பண்ண, நம்பி அவரை திருவரங்கத்துக்கு அழைத்துச் சென்றார். இவர்கள் திருவரங்கம் சென்றடைந்தபோது

காவேரிக்கரையில் பெருங்கூட்ட மொன்றை - பெரிய வைண வத்திரளைக்கண்டனர். விசாரித்தபோது ஆளவந்தார் திருநாடலங்கரித்த துக்கச்செய்தி கிடைத்தது. அவ்வாசிரியரின் சரமதிருமேனி (உயிர்பிரிந்த உடல்)யை அங்கு ஸேவித்தார். ஆசாரியரின் திருக்கையில் மூன்று விரல்கள் மடங்கி இருக்கக்கண்டு அவருக்கு நெருக்கமானவர்களை அதன் காரணம் யாதென விசாரித்தார். அவர்கள் ஆசிரியர் திருவுள்ளத்தில் நிறைவேறாமலிருந்த மூன்று விருப்பங்களை இவரிடம் சொல்ல இவரும் "இந்த ஆசாரியர் அருளும், பகவத் க்ருபையும் அடியேனிடமிருக்குமேல் இம்மூன்று குறைகளையும் நிறைவு பண்ணுகிறேன்" என்று எல்லாரும் அறியும்படி சபதம்செய்ய முடங்கியிருந்த யாமுனரின் விரல்கள் உடனே விரிந்தனவாம்.

வேதங்களை நான்காகப் பிரித்து அவற்றை அத்யயநம் பண்ணும் முறைகளையும் வகுத்து வேதாந்தத்தின் உட்கருத்தை ஸூத்ரவடிவில் வேதவ்யாஸர் ஸித்தாந்தமாக அமைத்து வைத்தார். சாரீரக சாஸ்த்ரம், உத்தரமீமாம்ஸா, ப்ரஹ்மஸூத்ரம் என்று இந்த நூலுக்குப் பல பெயர்களுண்டு. வ்யாஸரின் நேர்சிஷ்யர் போதாயனர் என்ற மஹரிஷி. அவர் வ்யாஸ ஸூத்ர நூலுக்கு "வ்ருத்திக்ரந்தம்" என்ற விரிவான வியாக்கியானத்தை எழுதிவைத்தார். இத்தையடியொன்றி த்ரமிடாசாரியர், டங்கிர், குஹதேவர் முதலான பல அறிஞர்கள் சிறிதும் பெரிதுமாக வியாக்கியானமியற்றினர். இந்த வ்யாக்யானங்களை அநுஸரித்து இடையில் வெளிவந்த அத்வைதக் கொள்கையைக் கண்டித்து ஒரு பாஷ்யம் இயற்ற வேணும் என்பது ஆளவந்தாரின் உள்ளக்கிடக்கைகளில் தலையாயது. மிகவும் சிரமப்பட்டு போதாய நவ்ருத்தியையும் மற்ற க்ரந்தங்களையும் கண்டு அவற்றைப் படித்துவிட்டு ஸ்ரீபாஷ்யம் என்ற சாரீரக மீமாம்ஸாபாஷ்யத்தை ஸ்ரீராமாநுஜர் இயற்றினார்.

யமுனைத்துறைவர் நீண்டகாலம் வைணவப் பெருந்தலைவராய் ஸ்ரீரங்கத்தில் அமர்ந்திருந்தார். இந்தத் தலைமையாசிரிய பதவிக்கு ராமாநுஜரே தகுதிபெற்றவர் என்று யாமுனர் கருத்து. தமது சிஷ்யர்களில் ஐவர்மூலம் ஸ்ரீவைஷ்ணவதர்சன உண்மைகளை ராமாநுஜர் கற்கும்படி யாமுனர் ஏற்பாடு பண்ணியிருந்தார். யாமுனரின் மறைவுக்குப்பின் எதிராசர் பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, பெரிய திருமலைநம்பி, திருமாலையாண்டான், திருவரங்கப்பெருமாளரையர் என்ற ஐந்து ஆசாரியர்களிடம் ராமாநுஜர் பயின்றார். இவ்வைவரும் ஆளவந்தாரின் முக்கிய சீடர்கள். இவர்கள் யாரிடமும் ராமாநுஜர் வடமொழி வேதாந்தத்தைக் கற்றதாகச் சொல்ல ஆதாரம் கிடைக்கவில்லை. எதிராசர் ஒன்பது வடமொழி நூல்கள் இயற்றியுள்ளார். அவற்றுள் மிகப் பெரியது மிக முக்கியமானது ஸ்ரீபாஷ்யமே. ஆளவந்தாரின் அநுக்ரஹத்தாலும் அவர் தேவப்பெருமாள் திருவடியில் பண்ணிய ப்ரபத்தியின் பலமாகவும் ராமாநுஜர் வேதாந்த வாக்கியங்களுக்குத் தாமே பொருள் கண்டார். ஆளவந்தாரருளிச்செய்த நூல்களை ஸேவித்தும் (படித்தும்) தெளிவுபெற்றார். போதாயநர் முதலான பூருவர்களின் நூல்கள், இவற்றுக்கெல்லாம் மேலாக நம்மாழ்வாரருளிய திருவாய்மொழி யெனும் தமிழ்ப்ரபந்தம் யாவும் இவருக்குத் துணைபுரிந்தன.

யமுனைத்துறைவரின் வடமொழி நூல்களில் இப்போது நாம் கணக்கிடைத்திருப்பவை ஸித்தித்ரயம் (மூன்று நூல்களடங்கியது) எனும் தத்துவ நூல், ஆகமப்ராமாண்யம், கீதார்த்த ஸங்ரஹம், ஸ்தோத்ர ரத்நம், ஸ்ரீஸ்துதி (சதுச்லோகீ) என்பவை. அவரியற்றிய புருஷ நிர்ணயம் (மஹாபுருஷ நிர்ணயம்) இப்போது கிடைக்கவில்லை. இதிலிருந்து எடுக்கப்பட்ட மேற்கோள்கள் சில பூர்வாசார்யக்ரந்தங்களில் பார்க்கப்படுகின்றன. புருஷ நிர்ணயம் "நாராயணனே பரம்பொருள் - பரப்ஹமம் - பரதத்வம்" என்பதை உபநிஷத்துக்கள், ஸ்ரீவிஷ்ணுபுராணம் போன்ற ஸாத்விக புராணங்கள், ஸ்ரீபகவத்கீதை முதலான நூல்களிலிருந்து ப்ரமாணங்களைக்கொண்டு நிலை நாட்டுவதாக அறிகிறோம்.

ஆகம ப்ராமாண்யம் என்பது வைணவ ஆகமமான பாஞ்சராத்ரம் வேதங்களோடு ஒத்த ப்ரமாணமாக கொள்ளத்தக்கது என்று ஸ்தாபிக்கிறது. பகவானான வாஸுதேவன் வாயிலாக அவதரித்த ஸ்ரீபாஞ்சராத்ர ஸம்ஹிதைகள் வேதத்திற்கு முரணான கருத்துகள் எதையும் சொல்லவில்லை. சிலர் எழுதிவைத்துள்ளது உண்மைக்குப் புறம்பானது என்று இந்நூல் ஸ்தாபிக்கிறது.

ஸித்தித்ரயம் என்பது 'ஆத்ம

ஸித்தி', 'ஈச்வரஸித்தி', 'ஸம்வித் ஸித்தி' என்ற மூன்று நூல்களைக் கொண்டவை. இவற்றின் துணைகொண்டே எதிராஜர் ஸ்ரீபாஷ்யத்தை இயற்றினார் என்று கொள்ளலாம். ஒரு விஷயத்தை ஆழ்ந்து ஆராய்ந்து காணும் முடிவு 'ஸித்தாந்தம்' எனப்படும். இதையே 'ஸித்தி' என்றும் சொல்வர். பிறர் எழுதிய 'இஷ்டஸித்தி' முதலான நூல்கள் தவறான (வேதத்துக்கு ஒவ்வாத) கருத்துக்களை வெளியிடுபவை என்று காட்டி அவற்றைக் கண்டித்து உண்மைப்பொருளை இம்மூன்று நூல்களில் ஆளவந்தார் நிலைநாட்டியுள்ளார்.

ஆத்ம ஸித்தியில் ஆத்மதத்வம் ஆராயப்படுகிறது. இதில் காணப்படும் மங்கள ச்லோகம் வருமாறு: இதில் திருமகள் கேள்வனிடம் பக்தியை ஆளவந்தார் ப்ரார்த்திக்கிறார்.

ப்ரக்ருதி புருஷ காலவ்யக்தமுக்தாய
திச்சாமநு விததநித்யம்
நித்யஸித்தைரநேகை: ।
ஸ்வபரிசரணபோகை: ஸ்ரீமதி
ப்ரீயமாணே, பவதுமமபரஸ்மிந்
பூருஷே பக்திபூமா ।।

இந்த ச்லோகத்தில் ஈச்வர ஸ்வரூபம் தெளிவாகிறது. புருஷோத்தமனான பரமபுருஷன் நித்யமான ஸ்ரீஸம்பந்தமுடையவன். ஸகல சேதநவஸ்துக்களும் ப்ரக்ருதி ப்ராக்ருதமான அசேதநங்களும் அவனிச்சைப்படியே இயங்குகின்றன. அவன் ஸதா நித்யர்களால் சூழப்பட்டு அவர்களிடம் கைங்கர்யம் கொள்ளுகிறான். "அகிலபுவநஜந்ம" என்று தொடங்கும் ஸ்ரீபாஷ்ய மங்கள ச்லோகம் இதே கருத்துக்களைக்கொண்டது. 'ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே பவதுமம பரஸ்மிந் சேமுஷீ பக்திரூபா' என்று இதில் ஈற்றடி காண்க. ஆத்ம ஸித்தியில் ஸாரமான கருத்து:

தேஹேந்த்ரிய மந: ப்ராணதீப்யோ
ந்யோநந்யஸாதந: ।
நித்யோ வ்யாபீ ப்ரதிக்ஷேத்ரமாத்மா
பிந்த: ஸ்வதஸ்ஸுகீ ।।

ஜீவாத்மாவானவன் உடல், புலன்கள், மனது, ப்ராணன் (மூச்சுக்காற்று), புத்தி (அறிவு) இவைகளினின்றும் வேறுபட்டவனாய், அணுமாத்ரனாய், தனக்குத் தானே விளங்குமவனாய் (ஸ்வயம்ப்ரகாசனாய்) ஞானமுள்ளவனாய், ஆநந்தாநுபவமுள்ளவனாய், அசேதநமான உடல்களில் இருக்கக் கூடியவனாய் உள்ளவன். இப்படிப்பட்ட ஆத்மாக்கள் ஒன்றிலொன்று வேறுபட்டு அநேகங்களாயுள்ளன. இவை ஆத்மஸித்தியில் தீர்மானித்து அருளிச்செய்யப்பட்ட விஷயங்களாம்.

ஈச்வரஸித்திக்கு குறிக்கோள், ஸகலப்ரபஞ்சங்களின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் (படைப்பு, காத்தல், அழித்தல்) எல்லாம் ஈச்வரனுக்குட்பட்டவை என்று ஸ்தாபிப்பதே. இதற்கு முதலில் எல்லாமறிந்தவனும் எல்லாவித ஆற்றலுமுடையவனும் நினைத்ததைச் செய்து முடிப்பவனுமான இறைவன் ஒருவன் உளன் என்று நிலைநாட்ட வேண்டியுள்ளது. ஸ்ரீராமாநுஜர் தமது ஸ்ரீபாஷ்யத்தில் 'சாஸ்த்ரயோநித்வ அதிகரண'த்தில் ஈஸ்வரஸித்தியிலுள்ள வாக்யங்களைப் பயன்படுத்தக் காண்கிறோம். ஆளவந்தார் இங்கு எழுதிவைத்தவையாவும் நமக்குக் கிடைக்காமல் போய்விட்டது நமது தௌர்ப்பாக்யமே. நமக்குக் கிடைத்திருக்கும் பாகத்தில் காணும் முடிவு:

'ஏகப்ரதாநபுருஷம், விவாத்யாஸிதம்
ஐகத் ।
சேதநாசேதநாத்மத்வாத் ஏகராஜ-
தேசவத் .।।

என்னும் ச்லோகம். உபயவிபூதியிலுள்ள எல்லா ஜீவராசிகளும் ராஜாதிராஜனான ஸ்ரீமந் நாராயணனின் செங்கோலின் கீழ் இடரின்றி வாழ்கின்றனர்; அவனே ஸர்வசேதந அசேதநங்களிலும் உட்புகுந்து நின்று ரக்ஷிக்கிறான் என்ற வேதாந்த விழுப்பொருளை ராஜா - ராஜ்ய உதாரணத்தால் விளக்கியருளுகிறார்.

ஸம்வித்ஸித்தியில் முக்கியமாகக் கேவல அத்வைதக் கொள்கையைக் கண்டனம் பண்ணி விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை பரமாசாரியர் நிலைநாட்டுகிறார். அத்வைதக் கொள்கையாவது ஸத் (உள்ளது) ஒன்றே உண்டு. பல என்பது ஏலாது. ஞானம் (அறிவு), ஞாதா (அறிபவன்), ஜ்ஞேயம் (அறியப்படுவது) என்று வெவ்வேறு கிடையாது. ஞானம் ஒன்றே தான் உண்டு. வேதாந்த ப்ரமாணங்களைக் காட்டி இக்கொள்கையை ஆளவந்தார் கண்டிக்கிறார். சித் (அறிவுள்ள ஜீவன்), அசித் (அறிவற்ற மண் போன்ற பொருள்கள்), ஈச்வரன் (இவற்றை சொத்தாக உடையவன், இவற்றைக் கட்டளையிட்டு நடத்துமவன்) என்று மூன்று தத்துவங்களையும் ஞானம், ஞாதா, ஜ்ஞேயம் என்று வேறுபட்ட மூன்று பொருள்களையும் உள்ளனவாகக் கொண்டுதானாக வேண்டும் என்றும் காட்டுகிறார். "ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம" (பிரமம் ஒன்றேயுள்ளது; இரண்டாவதென்பது கிடையாது) என்ற வேதாந்தவாக்யத்துக்கு ப்ரஹ்ம என்ற பரம்பொருளுக்கு குணம், உருவம், பெயர், ஐச்வர்யம்

எதுவும் கிடையாது என்பது பொருளல்ல. இவையாவும உள ளவையே என்று கூறும வேதாந்த வாக்யங்களுக்கு முர ணில்லாமல் பொருள் கூறவே ணும். "பரா அஸ்ய சக்தி விவிதைவ ச்ருயதே - ஸ்வா பாவிகீ ஞாநபலக்ரியாச". பரம் பொருளான இவனுடைய ஆற் றல் பலவிதமாகப் பேசப்படுகி றது; ஞானம் பலம் செயல்பாடு இவற்றைத் தன்னியல்பாகவுள் ளவன்; "நாந்தம் குணாநாம் கச் சந்தி தேநாநந்தோ யமுச்யதே தே" அநந்தன் என்று அவ னைப் பல நற்குணங்களுக்கு முடிவு (எல்லை) காணமுடியாது என்று அவனைப் பல நற் குணங்களுக்கும் நற்பண்புகளுக் கும் இருப்பிடமாகக் காட்டித் தரும் பல வேதாந்த வாக்யங் கள் உள்ளவையை காட்டுகிறார். 'ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம' என் பதால் இவன் ஒப்பற்றவன் - இவனையொத்த இரண்டாவது ஒருவன் கிடையாது. ஒப்பா ரும் மிக்காரும் இலையாய வன். "ந த்வத் ஸமோஸ்தி அப்யதிகச்ச ச்ருயதே" - உன் னையொப்பவனோ மிக்கவனோ எங்கும் கிடையாது. இவன் ஒருவனே அரசன்; வேறொருவ னில்லை. "இரண்டாவது கிடை யாது" என்றால் இவனையொத் தவன் வேறு கிடையாது என் றுதானே பொருள்? இவனுக்கு ராஜ்யம், ராணிகள், சேனை எது வுமில்லை என்னலாமோ? "அத் விதீயன்" என்றால் ஒப்பற்றவன் என்பதே பொருத்தமான பொரு ளாம். பரமபுருஷனுக்கு குணங்க ளிலோ ஐச்வர்யங்களிலோ திரு மேனியிலோ ஒப்பே கிடையா தாகையால் அவன் த்விதீயன் எனப்பட்டான்.

எதிராசன் "மாயவாதிபுஜங்க கருடஸ்த்ரைவித்ய சூடாமணி" என்று போற்றப்படுகிறார். யஜ்ஞமூர்த்தி என்ற பெயருள்ள பர பல அத்வைதிவித்வானை 18 நாள் வாதப்போரின் முடிவில் ஸித்தித்ரய ஸ்ரீஸூக்திகளைக் கொண்டே வெற்றிகொண்டார் என்பது பரஸித்தமான சரித் திரம். ஸித்தித்ரயமே ஸ்ரீபாஷ் யத்துக்கு வித்து என்னலாம். ஸ்ரீவைகுண்டகத்ய ஆரம்பத் தில்,

யாமுநார்ய ஸுதாம்போதிம்
ஆவகாஹ்யயதாமதி
ஆதாயபக்தியோகாக்யம் ரத்நம்
ஸந்தர்ஸயாம்யஹம்

என்று எதிராசனார் திரு வாக்கு. "யாமுநார்யருடைய அம்ருதவாக்கான ஸமுத்ரத்தில் மூழ்கி "பக்தியோகம்" என்ற உயர்ந்த ரத்நத்தை எடுத்துக் காட்டுகிறேன். இங்கே பேசப்ப டும் பக்தி ப்ரபத்தியே என் பது இதே நூலில் அடுத்துவ ரும் வாக்யங்களில் தெளிவாகி றது. ஸ்ரீபாஷ்யத்திலும் கீதா பாஷ்யத்திலும் வ்யக்தமாக அரு ளிச்செய்யப்பட்ட மோக்ஷோபா யம் பக்தி யோகமே. இதனை ஸாதநபக்தி என்பர். ப்ரபத்திக் குப் பலம் கைங்கர்யம். இதற்கு அடிப்படை பகவத் பக்தியாகை யால் ப்ரபத்தியை 'பலபக்தி' என்றும் அழைப்பர். ப்ரபந் நன் பக்தியை பகவானிடமே யாசித்துப் பெறுகிறான். "பக வந்! பக்தி மபி ப்ரயச்சமே" (ஸ்.ர. 54) என்று ஆளவந்தார் ப்ரார்த்திக்கிறார். எம்பெருமா னாரும் "பரபக்தி - பரஜ்ஞாந பரமபக்தியுக்தம் மாம் குருஷ்வ" என்று நம்பெருமானை வேண் டுகிறார். இவை மூன்றும் பக்தி யின் நிலைகளாம்.

ஆளவந்தார் பெரிய பிராட்டி யார் விஷயமாக அருளிச்செய்த ஸ்ரீஸ்துதி 'சதுச்லோகி' என்று வழங்கப்படும். நாலே சலோ கங்கள் கொண்ட துதியிது. பிராட்டி எம்பெருமானை விட்டு எப்போது பிரியாமல் நித்யமா கச் சேர்ந்தே இருப்பதால் வந் துள்ள ஒப்பற்ற பெருமைக ளைப் பேசி, "பிராட்டி புரு ஷகார பூதையாக எப்போதும் பெருமானுடன் இருக்கையில் நமது பிழைகளுக்கஞ்சி நாம் அவனிடமிருந்து விலகவேண் டாம். நம பிழைகளைப் பொறுப்பித்து நம்மை எம்பெரு மானுடன் சேர்க்கப் பிராட்டி பக கத்திலுள்ளபோது நாம் எதற் கும் அஞ்சவேண்டாம். லக்ஷ்மீ விசிஷ்ட (லக்ஷ்மியுடன் பிரியா மல் கூடியுள்ள) தத்வமே நமக்கு அடையத்தகுந்த உபே யம்" என்று ஆளவந்தார் காட் டித்தந்தருளுகிறார்.

சரணாகதிகத்யத்தில் எம்பெரு மானார் முதல் முன்னம் பெரிய பிராட்டியாரை அவர் பெரு மைகளைக் கூறித்துதித்து "பக வந்நாராயணாபிமதே..." என்று சரணம் பற்றும் அழகான வாக் யம் சதுச்லோகியை அடியொற் றியதே. இங்கு ஸ்வாமி ஸ்ரீரங் கநாச்சியாரை "அகில ஜகந்மா தரம், அஸ்மந்மாதரம்" என்று தாயுடன் உள்ள தம் குடல்து டக்கை விண்ணப்பம் பண்ணி, சரணம் புகுந்து, "அடியேன் எம்பெருமான் திருவடிகளில் நித்ய கைங்கர்யத்தை வேண்டி பண்ணப்புகும் சரணாகதி அது அமையவேண்டும்படி அமைந்து இடையறாது பயனளிக்க வேண் டும். அதற்கு தேவரீர் புருஷ காரம் பண்ணவேணும்" என்று வேண்டி, "அப்படியே ஆகுக" என்று பதிலும் பெறுகிறார். இது புருஷகார ப்ரபத்தி மட் டுமே. கூரத்தாழ்வான் அருளிய ஸ்ரீஸ்தவமும் ஸ்ரீபராசர பட்

டர் அருளிய ஸ்ரீகுணரத்நகோசமும் சதுச்லோகியை யடியொற்றியவையேயாகும்.

ஆளவந்தார் ஸ்தோத்ரம் (ஸ்தோதரத்நம்) அறுபத்திஐந்து ச்லோகங்கள் கொண்ட ஒரு ஆச்சர்யமான துதி. இது மந்த்ராத்நமான த்வயத்தின் விவரணம். பல ஸத்ஸம்ப்ரதாயார்த்தங்களை இதில் பரமாசாரியர் அநுஷ்டித்துக்காட்டுகிருர். எம்பெருமானாருக்கு இத்துதியில் அளவற்ற ஈடுபாடு உண்டு. இதில் ஆளவந்தார் தமது ஆசார்யர்களை நாதமுனி, பராசாரர், பராங்குச முனி (நம்மாழ்வார், என்ற க்ரமத்தில் வந்தநம் பண்ணி, ஸ்ரீமந்நாராயணனே பரதத்வம் என்று ப்ரமாணங்களாலும் சாஸ்த்ரஸம்மதமான யுக்திகளாலும் ஸ்தாபித்து, தர்ம - அர்த்த - காம மோக்ஷம் என்ற நான்கு பயன்களில் மோக்ஷமே விரும்பிப்பெறத்தக்கது என்பதைக் காட்டி, அதைப்பெற பகவச்சரணாரவிந்தங்களில் சரணம் புகுவதே சிறந்தவழி என்பதைத் தமது அநுஷ்டானம் மூலம் காட்டி, ''ஸதாசார்ய ஸம்பந்தத்தையிட்டு அடியேனுக்கருள் புரிய வேண்டும்'' என்ற ப்ரார்த்தனையோடு தலைக்கட்டுகிருர். நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழியின் பரமஸாரார்த்தங்களை இத்துதிமூலம் நாம் எளிதில் அறியமுடிகிறது.

வேதம், ''காரணம் து த்யேய:'' என்று ஆதிகாரணனான பரமபுருஷனிடம் பக்தி நிஷ்டையை உய்வுபாயமாகக் காட்டித்தந்தது. ஸ்ரீபாஷ்யத்திலும் கீதாபாஷ்யத்திலும் பக்தியோகமே சிறந்த மோக்ஷோபாயம் என்று எம்பெருமானாரால் நிலைநாட்டப்பெற்றது. ஆயினும், 'தம் தேவம் முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே'' என்ற உபநிஷத்வாக்யத்தின்படி ''ஆதிபுருஷனான தேவனை மோக்ஷத்தில் விருப்பமுள்ள நான் சரணம் பற்றுகிறேன்'' என்று அநுஷ்டிக்கையாலும், ''ந்யாஸ இதிப்ரஹ்மா'' என்றும் ''ந்யாஸம் ஏஷாம் தபஸாமதிரிக்த மாஹு:'' என்ற வேத வாக்யங்களின்படி ந்யாஸம் என்ற சரணுகதியே சிறந்த

மோக்ஷோபாயம் எனக்காண்கையாலும் ப்ரபத்தி (சரணுகதி) யின் மேன்மை தெரிவிக்கப்பட்டதாயிற்று. கர்ம ஜ்ஞாந பக்திகள் சேதனனின் முயற்சியை அடிப்படையாகக் கொண்டவை. சரணுகதி பகவானிடம் நமது ரக்ஷணப்பொறுப்பை ஸமர்ப்பித்து விடுவதை உயிராகக் கொண்டது. ஜீவாத்மா எம்பெருமானின் ஸொத்து, அவனுக்குஆட்பட்டது (சேஷ பூதன்), அவனிஷ்டப்படி கார்யங்கொள்ளத்தக்கது (பரதந்த்ரன்) என்ற முக்கிய தன்மைகளைப் பார்த்தால் ப்ரபத்தியே ஆத்மாவின் ஸ்வரூபத்துக்கு (சேஷத்வபாரதந்த்ர்யங்களுக்கு) இசைந்தது என்பது தேறும். இதனால் ந்யாஸம் எனும் சரணுகதியே சிறந்த ஆறு (வழி) என்பது பெறப்படும். இதையே நம்மாழ்வார் ''திருவேங்கடத்தானே! புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே'' என்று அநுட்டித்துக்காட்டினார். அவரைப்பின்பற்றி ஆளவந்தாரும் தமது ஸ்தோத்ரத்தில் பகவானைப் பலபடியாலும் துதித்து,

ந தர்ம நிஷ்டோஸ்மி நசாத்மவேதீ
நபக்திமாந் த்வச்சரணாரவிந்தே ।
அகிஞ்சநோऽநந்யகதிச் சரண்ய!
த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே ।।

என்று எம்பெருமான் திருவடிகளையே சரணமாகப் பற்றினார். ''ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ'' (முன்சொன்ன எல்லா உபாயங்களையும் விட்டு என்னையே சரணுகப்பற்று) என்று பகவான் ஸ்ரீகீதையில் (18.66) கட்டளையிட்டதைப் பின்பற்றுவது இந்த ச்லோகம். ஆழ்வார்கள் ''நோற்றநோன்பிலேன்'', ''நுண்ணறிவிலேன்'', ''நின்கணும் பத்தனல்லேன்'', ''புகலொன்றில்லாவடியேன்'' என்று தங்கள் வெறுமையைப் பலபடியாலும் பேசி பகவானைச் சரணம் பற்றியதைப் பின்பற்றுவதாயமைந்துள்ளது.

இதையே ''ஆசாரியர்கள் நெஞ்சுக்கிசைந்த சிறந்த உபாயம்; பெரியோர்கள் காட்டிய வழி'' என்று எம்பெருமானாரும் தமக்கும் தமது சிஷ்யர்களுக்குமாகக் கொண்டு தாமருளிச்செய்த சரணுகதிகத்யத்திலும் ஸ்ரீரங்க கத்யத்திலும் தமது அநுஷ்டானமாகவே காட்டித் தந்தருளினார். இந்த கத்யங்கள் (வசனநடையிலமைந்த துதிகள்) ஸ்தோத்ரரத்நத்தின் நிழலில் தோன்றியவை. எம்பெருமானார் ப்ரபத்தியை உபதேசமாகச் செய்யவில்லை. அநுஷ்டித்துக் காட்டினார். இந்த கத்யங்களில் பலபடியாலும் எம்பெருமானின் ஒப்பில்லாப் பெருமைகளைப் பேசித்துதித்து, 'ஸ்ரீமந் நாராயணா! அசரண்ய சரண்ய! அநந்ய சரணச் சரணமஹம் ப்ரபத்யே'' - திருமகளோடு எப்போது மிணைந்துள்ள நாரணனே! புகலில்லாதார்க்கு புகலாமவனே! புகலொன்றில்லா வடியேன் உன்னடிக்கீழமர்ந்து, புகுந்தேன்'' என்று சரணம் புகுகிருர். உடனே ''அத்ர த்வயம்''

என்று த்வயத்தை அநுஸந்தாநம் பண்ணும்படி நியமிக்கிறபடியால் (த்வய மந்த்ரத்தை பிறர்காதில் படாதபடி உச்சரிக்க வேண்டும்) சரணாகதிகத்யம் த்வயத்தின் விவரணமும் அநுஷ்டானமும் எனத்தெரிகிறது.

ஸ்தோத்ர ரத்நத்திலும் "ந தர்ம நிஷ்டோஸ்மி" என்ற ச்லோகத்தையடுத்து த்வயவிவரணமான பல ச்லோகங்கள் உள்ளன. இங்கு ஆளவந்தார தமது கைங்கர்ய ப்ரார்த்தனையுடன் எம்பெருமான் தம்மைக கைக்கொள்ளவேணும் என்பதில் தமது துடிப்பையும் வெளியிடுகிறுர். "கதாபுந: த்வச் சரணம் புஜத்வயம் மதீயமூர்த்தாந மலங்கரிஷ்யதி?" (31) 'எப்போது உமது திருவடித் தாமரைகளை அடியேன் சென்னிக்கு அணியாகப் பெறப் போகிறேன்?' "கதா அஹம் பகவந்தம் ஐகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி?" (46) 'எப்போது அடியேன் உனக்கே ஆட்செய்கையாகிற அடிமைத் தொழில் புரிந்து உம்மை மகிழ்விக்கப்போகிறேன்?' என்று தமது ஆர்த்தியை வெளியிடுகிறுர். இதே ஆர்த்தியை (திருவுள்ளத்தில் நன்கு படும்படி வேண்டுகை) எம்பெருமானார் ஸ்ரீவைகுண்ட கத்யத்தில் வெளியிடுகிறுர். இந்த கத்யத்தில் ஆளவந்தாரின் திருவாக்கைக்கொண்டே பல வாக்யங்களை ஸ்வாமி அமைத்துள்ளது அறிந்து நோக்கத்தக்கது. "கதா அஹம் பகவந்தம் ப்ரஹர்ஷயிஷ்யாமி" (ஸ்தோ-46) எப்போது எம்பெருமானை மகிழ்விப்பேன்? எனபது ஸத்ஸம்ப்ரதாயத்தின் உயிரான ஸ்ரீஸூக்தியாம். எம்பெருமானுக்கும் பிராட்டிக்குமாகச் செய்யும் கைங்கர்யத்தினால் அவர்கள் முகம் மலரவேண்டும். "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" என்று நம்மாழ்வார் ப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்தாறிறே. இந்த ஸ்வாரஸ்யத்தைக் கொண்டே பாஷ்யகாரரும் (ஸ்ரீராமாநுஜரும்) ஸ்ரீபாஷ்யத்தின் முடிவில் "ந ச பரமபுருஷ: ஸத்யஸங்கல்ப அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசிதாவர்த்தயிஷ்யதி" - ஸத்ய ஸங்கல்பனான பரமபுருஷன் தனக்கு மிகவும் ப்ரியனான ஜ்ஞானியைப் (பகவதநுபவத்தையே பேறாக விரும்புமவன்) பெற்று எப்போதும் கைவிடானன்றே? எனறருளிச்செய்தது. சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேறு என்றும் இப்பேற்றுக்கு உகப்பவனும் அவனே என்று ஆளவநதார் காட்டியருளியதை அடியொற்றி இவரும் அருளிச்செய்தார். திருவாய்மொழி முதல் பாசுரத்தில் "துயரறுசுடரடி" என்பதற்கு நம் துயராறுக்கும் சுடரடி என்னும் பொருளை விட்டு ஆழ்வாரைப் பெற்றதால் (சேதநலாபத்தால்) தான் துயரறும் சுடரடி என்று எம்பெருமானார் நிரவஹிக்கும் அழகை ரஸிக்கவேணும்.

ஸ்தோத்ரரத்நத்தின் இறுதியில் ஆளவந்தார் ஈச்வரனிடம் ஆத்மஸமர்ப்பணம் பண்ணி, உடனே "அவனதான இவ்வாத்மாவை அவனிடம் ஸமர்ப்பிக்க நாமார்?" என்று தெளிந்து, "பகவந்! பக்திமபி ப்ரயச்சமே" என்று அவனிடம் மாறாத பக்தியை யாசித்தார். இது ஆழ்வார்களுக்கு அவன் ஒரு காரணமுமின்றி தானாக அளித்த பரிசு. "மறர்வறமதிநல மருளினன்" என்று ஆழ்வாரே காட்டியருளினார். "பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தியுக்தம் மாம் குருஷ்வ" - நின்கண் பக்தியுள்ளவனாக என்னை ஆக்கியருள்வாய் என்று எமபெருமானார் வேண்டுகிறுர் கத்யத்தில். ப்ரபந்நனுக்கு பக்தி தேஹயாத்ராசேஷம். (உடல்தரிக்கைக்கு வேணடியதொன்று)

ஸ்தோத்ரத்தை முடிக்கையில் ஆளவந்தார் தம்மைக்கணிசியாமல் தமக்குப் பிதாமஹரும பரமாசாரியருமான நாதமுனிகளுடைய குடற்றுடக்கு, ஆத்மஸம்பந்தம் இவற்றையிட்டுத் தம்மை அங்கீகரித்தருளவேணுமென வேண்டித்தலைக்கட்டுகிறுர். ஸதாசார்யஸம்பந்தமே உத்தாரகம் (உய்வளிக்கவல்லது) என்ற தெளிந்த ஸம்ப்ரதயார்த்தத்தை இங்கு வெளியிட்டருளினார். எம்பெருமானாரும் இவ்வர்த்தத்தை தமதநுஷ்டானத்திலும் உபதேசங்களினாலும் சிஷ்யர்களுக்குக் காட்டியருளினார்.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய அடிப்படைக்கொள்கைகளைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டித்தருமது ஆளவந்தாரின் ஸ்தோத்ர ரத்நம். இவைகளாவன: எமபெருமானே மிகவிரும்பிப்பெறத் தக்கபேறு; இப்பேற்றையடைய அவன் திருவடிகளே (அவனே) அறு (வழி). உபேயமான அவனைப்பெற அவனே உபாயம். பிராட்டியும் அவனுமாகிய சேர்த்தியில் ஆட்செய்கையே கைங்கர்யமே - நான் அவனிடம் யாசித்து பெறவேண்டிய புருஷார்த்தம். நமது வெறுமையைக் காட்டி அவனையே உபாயமாக வரிப்பது (அழைப்பது) ப்ரபத்தி. நம்மிடம் குறைபாடுகளே மிகுதியாக உள்ளபடியால் எல்லாம் வல்லவனும், வாத்ஸல்யம், க்ருபை முதலான நற்குணங்களால் நிறைந்தவனுமான

அவனே நமக்கு வாழ்ச்சியளிக் கவலலவன் என்பதையும், இப்படி வாழ்ச்சியளிக்க ஸதாசார்ய ஸம்பந்தமே ஹேதுவாகிறது என்பதையும் இத்துதி விளக்கிறது.

புறச்சமய வாதங்களைக் கண்டிப்பதை முக்கிய குறிக்கோளாகக் கொண்ட ஸ்ரீபாஷ்யத்தில் அவர்களறிந்த ஞாந ரூபமான பக்தியே முக்தித்துப் பாமோபாயம் என்று பாஷ்யகாரர் நிலைநாட்டினார். கீதா பாஷ்யத்திலுமிப்படியே. இந்த பெருநூல்களிலும் ப்ரபத்தி எனுமுபாயத்தின் சீரமையை ஆங்காங்கே ஸூசநமாகக் (ஊகித்தறியும்படி) காட்டத்தவறவில்லை. ப்ரபத்தியே தமக்கு மிகவும் அபிமதமான மோக்ஷோபாயம் என்பதை நம்மாழ்வார், ஆளவந்தார் இவர்களின் உபதேசம் அநுஷ்டானங்களை அடியொற்றி தாமருளிய கத்யங்களில் உடையவர் வெளியிட்டருளினார். கத்யங்கள் ஸ்தோத்ர ரத்நத்தையே அடிப்படையாகக் கொண்டு தோன்றியவை என்பது இவ்விரண்டு க்ரந்தங்களையும் ஒக்க ஸேவித்தால் எளிதில் அறியப்படும். ஆளவந்தாரிடம் பேரன்பு பூண்டவரும் அவருடைய ஸ்ரீஸூக்திகளையும் தஞ்சமாகக் கொண்டவருமான எம்பெருமானார், நம்மாழ்வாரையும் ஆளவந்தாரையும் அடியொற்றி ப்ரபத்தியையே தமது ஸ்வரூபத்துக்கிணைந்த சிறந்த உபாயமாக அறுதியிட்டார் என்பதில் வியப்பேதுமில்லை.

ஆளவந்தா[illegible] அருளிச் செய[illegible] [illegible]ஸ்தோத்ரத்தைங்க[illegible] [illegible] கொண்டு [illegible] நூரின் [illegible]கோகர [illegible]

நாராயணா. பரமபுருஷ கீதா

# நல்லொழுக்கமும் நல்லபண்பும்

பக்தி இலக்கியங்கள் வெறும் பக்தியை மட்டும் போதிக்க வில்லை. பக்தியின் உயிர்நாடியே நல்லொழுக்கமும் நல்ல பண்பும்தான். இதை வலியுறுத்தியே பொய்கையாழ்வார் கூறுவதாவது. பிறருக்குச் சொந்தமான பொருளைச் சற்றும் விரும்பமாட்டேன். கீழானவர்களோடு சேரமாட்டேன். மேன்மக்களோடுதான் உறவாடி மகிழ்வேன். திருமாலைத் தவிர வேறு தெய்வத்தை வணங்கமாட்டேன் என்பதாக அமைந்த பாடல்.

'நயவேன் பிறர்பொருளை நள்ளேன் கீழாரோடு
உய்வேன் உயர்ந்தவரோடு அல்லால் - வியவேன்
திருமாலை அல்லது தெய்வம் என்று ஏத்தேன்
வருமாறுஎம் மேல்வினை'

இப்பாடலால் பொய்கையாழ்வார் உணர்த்தும் கருத்து: பிறர் பொருளை விரும்பக்கூடாது. கீழ்மக்களோடு சேரக்கூடாது. உயர்ந்த பண்புடையவர்களோடுதான் சேர வேண்டும் என்பதாகும்.

திருமதி. சு. பொன்னம்மாள் - முகலூர்.



# நித்ய அபிஷேக ஸேவை

யாத்திரிகர்களின் வசதிக்காக திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி கோயிலில் புதியதாக "நித்ய அபிஷேக ஸேவை" ஒன்று புகுத்தப்பட்டுள்ளது.

இந்த ஸேவையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ஆண்டொன்றுக்கு ரூ. 42/- செலுத்துதலோ அல்லது தேசியமயமாக்கப்பட்டுள்ள வங்கி ஏதேனும் ஒன்றில் "செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம் திருப்பதி" என்ற பெயரில் ரூ. 500/- முதலீடு செய்தலோ வேண்டும். முதலீடு செய்யப்பட்ட தொகைக்குக் கிடைக்கப்பெறும் வட்டித் தொகையினைக் கொண்டு தொடர்ந்து கிருஹஸ்தரின் பெயரில் நிரந்தரமாக ஸேவை நடத்தப்பெறும் பெரியவர்கள் இருவர் வருடத்திற்கு இருமுறை இச்ஸேவைக்கு அனுமதிக்கப்படுவர்.

நிரந்தரமாக தொடர்ந்து இச்ஸேவையினை நடத்த விரும்புவர் முதலாண்டுக்கான ரூ. 42/- செலுத்துவதோடு ரூ. 500/- செலுத்துதல் வேண்டும்.

திருப்பதி நகரத்திலிருந்து 2 கி.மீ. தொலைவில் ஸ்ரீகபிலேஸ்வரஸ்வாமி கோயில் உள்ளது. கோயில் வளாகத்திறகுள் [illegible] [illegible] [illegible]

சாஸ்த்ரே ஸமீரித'' என்று முதல் முன்னம் தமது ஸங்க ரஹத்தில் அருளிச்செய்கிரர். கர்மஜ்ஞாநங்களின் துணை கொண்ட பக்தியோகத்தாலேயே அடையப்படுமவனான பரம புருஷனான நாராயணனே கீதா சாஸ்த்ரத்தில் நன்ருகப் பேசப் படுகிருன். இந்த ஸங்கர ஹத்தில் முப்பத்திரண்டு ச்லோ கங்கள் உள்ளன. இவற் றுள் ஒவ்வொரு அத்யாயத் தின் ஸாரார்த்தத்தை ஒவ் வொரு ச்லோகத்தால் வெளி யிட்டு, மூன்று ஸ்லோகங்களால் மூன்று ஷட்கங்களின் (ஷட் கம் ஆறு அத்யாயம்; முதல், நடு, கடைசி என்று மூன்று ஷட்கம்) ஸாரத்தை வெளியிட்டு மேலும் பத்து ச்லோகங்களால் கீதையின் ஸாரமான பொருள் களைத் திரள எடுத்தருளிச்செய் கிருர். கீதா சாஸ்த்ரஸா ரம் என்று ஆளவந்தார் அரு ளிச்செய்வது இதுவே. அவரவர் நிலைக்குச் சேர தமக்கு சாஸ்த் ரங்களில் விதிதமான தர்மாநுஷ் டானத்தைப் பற்றில்லாமல் பக வத் கைங்கர்யமாக அநுஷ் டித்து, அதனால் மனத்தூய்மை பெற்று, மேலே ஆத்மாவைப் பற்றிய சிந்தநமான ஜ்ஞாநயோ கத்திலிருந்து, ஆத்ம ஸாக்ஷாத் காரம் (ஆத்மாவைக் காணு தல்) பெற்று, ஆத்மாவுக்கும் அந் தராத்மாவான ஸர்வேச்வரனை உள்ளன்புடன் இடைபெருமல் சிந்தநம் பண்ணி அவனையே அடைவதான மோக்ஷத்தைப் பெற வேண்டும்.

கீதையில் ''மாமேகம் சரணம் வ்ரஜ'' - என்னையே புகலாகப் பற்று என்று கண்ணன் விதித் தது (18-66), பக்தி ஸித்திக்கைக் காக. பக்தி பலனளிப்பதற்குத் தடையாயுள்ள பாபங்கள் விலகு வதற்காக ''உனது பாபங்களை நான் போக்கித் தருகிறேன்'' என்று இந்த ச்லோகத்திலேயே கண்ணன் சொல்வது. என் னையே புகலாகப் பற்று என் பதை என்னையே உபாயமாகப் பற்று என்று கண்ணன் சொல் வதாக ஒரு விளக்கம் உண்டு. இப்போது அவனே உபாயமாக வந்து பாபங்களைப் போக்கி மோக்ஷத்தையும் அளிப்பதாகக் கருத்து. இக்கருத்தில் உபாய மான பக்தியோகத்துக்கு இட மில்லை. ஸ்தோத்ரத்தில் ஆள வந்தார் எம்பெருமானை ''ந தர்மநிஷ்டோஸ்மி'' என்ற ச்லோ கத்தில் சரணம் பற்றியதும், எம் பெருமானார் சரணாகதிகத்யத் தில் அநுஷ்டித்ததும் இக்கருத் தையொட்டியே. ஆளவந்தாரிட மிருந்து உபதேசமாகப் பெற்று திருக்கோட்டியூர் நம்பி ராமா நுஜருக்கு ரஹஸ்யமாக உப தேசித்தது இக்கருத்தையே. எம்பெருமானையே உபாயமாகப் பற்றுகை ஸித்தோபாயவரணம் எனப்படும். இதையே 'சரணா கதி', 'ப்ரபத்தி' என்ற பெயர்க ளால் வ்யவஹரிப்பது. ப்ரபந் நனுக்கும் பக்தி அவசியமான தேவை. இதையே 'பகவந்! பக் திமபி ப்ரயச்சமே' என்று ஆள வந்தார் வேண்டுவது.

ஆளவந்தாரின் பாட்டனா ரான நாதமுனிகள் திவ்யப்ரபந் தங்கள் அனைத்தையும் யோக நிலையில் நம்மாழ்வாரிடம் உப தேசமாகப் பெற்ருர். இவற்றுள் ஆழ்வாரருளிச்செய்த திருவாய் மொழி தலையாயது. திரு வாய்மொழியின் ஸாரார்த்தங் களை எம்பெருமானார் ஆள வந்தாரின் சிஷ்யர்களுள் ஒரு வரான திருமாலையாண்டான் என்பவரிடமிருந்து பெற் ருர். திருவாய்மொழி ஸாமவேத ஸாரம் என்றும் 'தமிழ்மறை' என்றும் கொண்டாடப் படு கிறது. ஸ்ரீபாஷ்யத்தை எழுதி முடிக்க திருவாய்மொழி மிகவும் உதவிற்று என்பதை ''பாஷ்யகா ரர் இது கொண்டு ஸூத்ரவாக் யங்களை ஒருங்கவிடுவர்'' என்ற ப்ரஸித்தமான ஆசார்ய ஹ்ரு தய வாக்யத்தின் மூலம் அறி கிருேம். திருமாலையாண்டானி டம் கேட்டறிந்தவை யொழிய எம்பெருமானார் ஆளவந்தாரரு ளால் பல அர்த்தங்களைத் தாமே யோசித்தறிந்தார். திரு வாய்மொழியை ஈன்றதாய் நம் மாழ்வார்; அதை வளர்த்த இத் தாய் இராமாநுசன். எம்பெரு மானாரின் ஆழ்ந்த திருவாய் மொழியநுபவத்திற்கும் ஆளவந் தாரருளே காரணம். இவ்வி ஷயத்திலும் சொல்லவேண் டியது நிறைய இருப்பினும் விரிவுக்கஞ்சி இத்துடன் நிறுத் திக்கொள்கிறேன். திருவாய் மொழி விளக்கமாக ஆளவந் தாரோ, ராமாநுஜரோ நூலே தும் அருளிச்செய்யவில்லை. பின்பவதரித்த வியாக்யானங் களில் எம்பெருமானார் சில பாசு ரங்களுக்குத் தாமாக அருளிய ரஸமான அர்த்தங்கள் காட்டப் பட்டுள்ளன.

ஆளவந்தார் திருவடிகளே சர ணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.



# ஸ்ரீஆளவந்தாரின் சரணாகதி தத்துவம்

கோயில் ஆத்தான். எஸ். விஜயராகவன் - திருப்பதி.

ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரையில் எட்டாம் இடத்தை வகிக்கும் ஆசார்யர் ஸ்ரீஆளவந்தார் ஆவார். ஆசார்யர் என்று ஸாமாந்யமாகச் சொன்னால் அது நம்மாழ்வாரையே குறிக்கும். அது போலப் பரமாசார்யர் என்னும் சொல் ஸ்ரீஆளவந்தாரையே குறிக்கும். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மிகவும் கொண்டாடத்தக்க மூன்று ரத்நங்கள் உண்டு. ஒன்று 'புராணரத்நம்' என்று சொல்லப்படும் ஸ்ரீவிஷ்ணுபுராணம். இன்னொன்று 'மந்த்ரரத்நம்' என்று சொல்லப்படும் த்வயம். மூன்றாவது 'ஸ்தோத்ரரத்நம்' என்று புகழப்படும் ஸ்ரீஆளவந்தார ஸ்தோத்ரம். இவர் அருளிய எட்டு க்ரந்தங்களில் இது ஒரு சிறந்த நூலாகும். சொல்லில் எளிமையும் பொருளில் ஆழமும் கொண்டது. இதை அநுஸரித்தே பிற்காலத்திய ஆசார்யர்கள் ஸ்தோத்ரக்ரந்தம் அருளினர். ஸ்துதிபாடும் போதே பல அரிய ஸம்ப்ரதாயார்த்தங்களை இந்நூலில் விளக்கியுள்ளார். பிற்காலத்தில் அவதரித்த ஸ்ரீபிள்ளை லோகாசார்யர் போன்ற பெரியோர்கள் இவ்வர்த்தங்களை ரஹஸ்யக்ரந்தங்களில் இன்னும் தெளிவாகப் பதித்துவைத்தனர். ஸ்தோத்ரரத்நத்திற்கு ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை அருளிய மணிப்ரவாள உரையும் ஸ்ரீவேதாந்த தேசிகன் அருளிய வடமொழி உரையும் நமக்கு மஹோபகாரகமாக உள்ளன. ஸ்தோத்ர ரத்நத்தில ஸ்ரீஆளவந்தார் சரணாகதி பற்றித் தெரிவித்துள்ள சில அர்த்தங்களை இக்கட்டுரையில் அநுபவிப்போம்.

மோக்ஷமடைவதற்குக் கர்ம யோகம், ஜ்ஞாந யோகம், பக்தி யோகம் என்பன போன்ற பல வழிகளை சாஸ்த்ரம் சொல்லும். அங்கங்கெல்லாம் "இதைச் செய்" "இவ்வாறு செய்" என்று விதி ரூபமாகவே பேசப்பட்டுள்ளது. ஆனால் சரணாகதி பற்றிப் பேச வந்த வேதபுருஷன் இந்த உபாயம் தனக்கு மிகவும் உகந்தது என்னும் அபிப்ராயத்தாலே தானே இதை அநுஷ்டித்துக் காட்டுவதாக அமைந்துள்ளது.

"யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்
யோ வை வேதாந் ச ப்ரஹிணோதி தஸ்மை |
தம் ஹ தேவம் ஆத்ம புத்தி ப்ரஸாதம்
முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே ||"

'எவன் பிரமனை முன் படைத்தானோ, எவன் வேதங்களையும் அவனுக்கு உபதேசித்தானோ, அப்படிப்பட்ட தேவனும், தன் விஷயமான ஞானத்தை ப்ரகாசிப்பிப்பவனுமான பரம புருஷனை மோக்ஷமடைய விரும்பும் நான் சரணமடைகிறேன்.'

ஹிதைஷியான ஒரு தந்தை, தன் குழந்தைக்குத் தரையில் விழுந்து வணங்குவது எப்படியென்று தானே செய்துகாட்டுவானோ, அதேபோல், வேதபுருஷனும் பரமக்ருபையோடு நமக்குக் கற்றுக்கொடுக்கிறான்.

இவ்வாறு வேதத்தில் புகழப்பட்ட சரணாகதி என்னும் உபாயம் ஸ்ரீராமாயணம், மஹாபாரதம், புராணங்கள், ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் ஆகியவற்றால் மிகவும் ஆதரவுடன் அநுஷ்டாந ரூபத்தில் கைக்கொள்ளப்பட்டுள்ளது. ஆகவே ஸ்ரீஆளவந்தார் தாமும் இதை அநுஷ்டித்து, அநுஷ்டாந ப்ரகாரத்தைச் சில ச்லோகங்களால் வெளியிட்டுள்ளார்.

"ந தர்மநிஷ்டோஸ்மி நசாத்ம வேதீ
ந பக்திமாந் த்வச் சரணாரவிந்தே |
அகிஞ்சநோநந்ய கதி: சரண்ய
த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே ||"

சரணமடையத்தக்க எம்பெருமானே! அடியேன் கர்மயோகத்தில் நிலைநின்றவன் அல்லேன்; ஆத்மஜ்ஞாநமும் உடையேனல்லேன்; உன் திருவடித்தாமரைகளில் பக்தியை உடையவனல்லேன்; ஒரு உபாயமுமற்றவனும், வேறு புகலில்லாதவனுமான அடியேன் உன் திருவடித்தாமரைகளை உபாயமாகப் பற்றுகிறேன்.

சரணாகதி பண்ணும் அதிகாரி எப்படியிருக்கவேண்டும் என்றும் சரணாகதியை எப்படி ப்ரயோகம் செய்ய வேண்டும் என்றும் இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டுள்ளது. இதற்கு மூலம் அஹிர்புத்ந்யஸம்ஹிதையிலே காணப்படுகிறது.

"அஹமஸ்மி அபராதாநாம்
ஆலயோகிஞ்சநோऽகதி: |

த்வமேவோபாய பூதோ மே பவேதி
ப்ரார்த்தநா மதி: ।
சரணாகதிரித்யுக்தா ஸா தேவேஸ்மிந்
ப்ரயுஜ்யதாம் ॥"

"நான் குற்றங்களுக்கு ஓர் இருப்பிடமாயிருக்கிறேன். என்னை ரக்ஷித்துக்கொள்ள ஓர் உபாயமுமற்றவனாய் இருக்கிறேன். உன்னையொழிய வேறு கதியில்லாதவனாயிருக்கிறேன். நீயே எனக்கு உபாயமாக ஆவாயாக" என்று ப்ரார்த்திக்கும் புத்தியே சரணாகதி எனப்படுகிறது. அது இந்த பகவான் விஷயத்தில் செய்யப்படட்டும்.

இவ்வாறு சரணாகதியின் ஸ்வரூபம் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. சரணாகதிக்கு எந்த நியமுமில்லை; ஆனால் எவனைச் சரணம் புகுவது என்ற ஒரே நியமம் உளளது. இதையே "விஷய நியமம்" என்பர். சரணமடையப்படும் விஷயம் பகவான் ஒருவனே என்பதை மேற் கூறிய அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை தெரிவிக்கிறது. கடற்கரையில் ஸ்ரீசக்ரவர்த்தி திருமகன் ஸமுத்ர ராஜனை க்ரமமாகச் சரணமடைந்தபோதிலும் அது பலிக்கவில்லை. காரணம், இந்தச் சரணாகதிக்கு விஷயமான ஸமுத்ரராஜனுக்குச் சரணமளிக்கும் எந்தக் குணமும் இல்லாமையே.

நாம் சரணம் புகும் விஷயம் மிகவும் உயர்ந்ததாக இருக்க வேண்டும். இதையே "பரத்வம்" என்பர். அவன் தன் மேன்மை பாராது, தம் தண்மையும் பாராது, நம்மோடு கலந்து பழகும் ஸ்வபாவமுடையவனாயிருக்க வேண்டும். இக்குணத்தை "ஸௌசீல்யம்" என்பர். அவனை நாம் எளிதில் அடையும்படி அவனிருக்கவேண்டும். இது "ஸௌலப்ய குணம்" எனப்படும். அவன் நம்மிடம் அளவற்ற அன்பு பூண்டிருக்க வேண்டும். இதுவே "வாத்ஸல்யம்" ஆகும். இக்குணங்கள் சரணாகதி பண்ணும் விஷயத்தில இன்றியமையாதவை.

சரணாகதி பண்ணும் நமக்கு அநுகூலம் எது ப்ரதிகூலம் எது என்று சரண்யன அறிந்திருக்க அவனுக்கு "ஜ்ஞாநம்" தேவை. இந்த ப்ரதிகூலத்தைப்போக்கி அநுகூலத்தைத் தரவல்ல "சக்தி" ஆவச்யகம். நமக்குக் கிடைக்கும் பலனைத் தன் பேறாகக் கருதும் "ப்ராப்தி" என்கிற ஸம்பந்தமும் அவனுக்கு வேண்டும். சரணாகதனின் விருப்பமான பலனைத் தன்னிடம் பெற்றிருக்கும் "பூர்த்தி" அவனுக்கு வேண்டும். மேலும் அவன் நம்மிடம் "தயை" உடையவனாதல் வேண்டும். இவ்வனைத்துக் குணங்களும் நிரம்பப்பெற்றவன் ச்ரிய: பதியான ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே என்று சாஸ்த்ரங்கள் நிர்ணயித்துள்ளன. அவனையே ஆளவந்தார் "சரண்ய" என்று விளிக்கிறார். இது மிகவும் அர்த்த புஷ்டியுடைய சொல். சரணாகதி பண்ணும் இந்த ப்ரகரணத்தில் வேறெந்த பதமும் இதற்கீடாகாது. இவ்வாறு ஸாபிப்ராயமாக ப்ரயோகிப்பதை "பரிகராங்குரம்" என்று வடமொழி அணியிலக்கணம் கூறும்.

நம்மாழ்வார் சிரீவரமங்கல நகர் என்னும் வானமாமலையில் எம்பெருமானைச் சரணம் புகுகிறார். "நோற்ற நோன்பிலேன், நுண்ணறிவிலேன், ஆகிலும் இனி உன்னைவிட்டொன்றும் ஆற்ற கிற்கின்றிலேன்" என்று. இதை அடியொற்றியே ஆளவந்தாரின் சரணாகதியும் அமைந்துள்ளது.

சரணம் புகுபவன் கைம்முதலில்லாதவனாகவும் வேறு புகலிடமற்றவனாகவும் இருக்கவேண்டும். ப்ரஹ்மாஸ்த்ரம் வேறொரு அஸ்த்ரப்ரயோகத்தையும் பொறுக்காது. அதேபோல சரணாகதியும் வேறெந்த உபாயத்தையும் பொறாது. இதனால் உபாயம் எம்பெருமானேயன்றி "நீயே உபாயம்" என்னும் இந்த நினைவுகூட உபாயமன்று என்று தேறிற்று.

மற்ற வைதிகமான கர்மங்களிற்காட்டில் சரணாகதி பலவிதத்தில் உயர்ந்தது. எந்த க்ஷணத்தில ஒருவனுக்கு எம்பெருமானைச் சரணமடைய இச்சை பிறக்கிறதோ அதுவே இதற்குரிய காலம். ஜ்யோதிஷ்டோமம் போன்ற கர்மங்களுக்குக் குறிப்பிட்ட ருது, பக்ஷம் முதலிய ஆவசயகம். இராவணன் "நம் அரக்கர் குலத்தைக் கெடுத்தவனே" என்று நிந்தித்த உடனேயே விபீஷணன் இராமபிரானைச் சரணமடைந்தான். வைதிக கர்மங்களை அநுஷ்டிக்க மூவர்ணம் முதலிய நிர்ப்பந்தங்களுண்டு. ஆனால் சரணாகதியை எவரும் செய்யலாம். காகாஸுரன் சரணாகதி பண்ணிப் பேறு பெறவில்லையா? வைதிக கர்மங்களை இன்னின்னபடியே செய்ய வேண்டும் என்கிறமுறையுண்டு. சரணாகதிக்கு அதுவுமில்லை. பெருங்கடலைத் தாண்டிவந்த விபீஷணன் ஸ்ரீராமனைச் சரணமடையும் முன் கடலில் ஒரு முழுக்கிட்டு வந்தானா? இந்த பலத்தைக் கருதித் தான் சரணாகதி என்கிறதில்லை. த்ரௌபதி சரணாகதிக்குப் பலம் வஸ்த்ரம். காகம், காளியன் இவர்கள்

சரணாகதிக்குப் பலம் பரானன். பெருமாள் சரணாகதியின் உத்திஷ்டபலம் கடலைத் தாண்டுதல். இவ்வாறு பலவகை பலன்களைத் தரவல்லது சரணாகதி. சில கர்மங்கள் ஆயுள் உள்ளவரை செய்ய வேண்டியவை. ஆனால் சரணாகதி ஒருமுறை அநுஷ்டித்தால் போதுமானது. அச்வமேத யாகம் பண்ணுவதற்காக ஸ்ரீராமன் பொன்மயமான ஸீதையை நிர்மிக்க வேண்டியிருந்தது. அப்படி சரமஸாத்யமன்று சரணாகதி. இரு கைகளைக் குவித்தாலே போதும்.

ஏனைய உபாயங்கள் அநுஷ்டித்து வெகுகாலம் கழித்து ஏதோ ஒரு தேசத்தில் வேறொரு தேஹத்தோடு கூடியிருக்கும் போது பலன்தரும். சரணாகதியோ அதே காலத்தில் அதே இடத்தில் பலன்தரவல்லது. ஓரோர் பாபத்திற்கும் சாந்த்ராயணம் க்ருச்ச்ரம் முதலிய ப்ராயச்சித்தங்கள் வேறுபட்டிருக்கும். அவைகளைச் செய்வதும் மிகக் கடினம். ஆனால் ஸர்வாபராதங்களுக்கும் சரணாகதி ஒன்றே ப்ராயச்சித்தமாக அமையும். ஒவ்வொரு வைதிக கர்மமும் ஒரு பலனையே தரவல்லது. சரணாகதியோ பரபக்தி, பரஜ்ஞாநம், பரமபக்தி பரமபதப்ராப்தி, பகவதநுபவம், பகவத் கைங்கர்யம் எல்லாவற்றையும் தரும் சக்தியுடையது. மற்ற கர்மங்கள் பலனளித்தபின் தாம் நசிந்துவிடும். அப்படிப்பட்ட க்ஷயம் சரணாகதிக்கு இல்லை. த்ரௌபதி சரணாகதி பண்ணியதால் எம்பெருமான் திருவுள்ளமுகந்து பாண்டவர்களுக்குத் தூதுசென்று, தேரோட்டி, கீதோபதேசம் பண்ணி, பாண்டவர்களுக்குப் போரில் வெற்றிபெறச் செய்து இன்னும் பல நன்மைகளைச் செய்தும் தான் ஏதும் செய்யாதது போல வேயெண்ணி மனக்குறைவுடனேயே தன்னுடையச் சோதிக்கு எழுந்தருளினான் என்று பாரதம் பகரும். மற்ற கர்மங்களுக்கு மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்று கரணங்களின் ஸஹகாரமும் வேணும். சரணாகதியை ஏதோ ஒரு கரணத்தால் அநுஷ்டித்தாலே போதுமானது.

இப்படிப்பல பெருமைகளையுடையது சரணாகதி என்பதை ஸ்ரீஆளவந்தார்,

த்வதங்க்ரி முத்திச்ய கதாபி
கேநசித்
யதாததாவாபி ஸக்ருத்
க்ருதோஞ்ஜலி: ।
ததைவ முஷ்ணத்யசுபாந்ய
சேஷத
சுபாநி புஷ்ணாதி ந ஜாது
ஹீயதே ।।"

என்ற ச்லோகத்தால் விளக்கியுள்ளார்.

பாஞ்சராத்ர ஸம்ஹிதையில்,

"ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப:
ப்ராதி கூல்யஸ்ய வர்ஜநம் ।
ரக்ஷிஷ்யதீதி விச்வாஸ:
கோப்த்ருத்வ வரணம் ததா ।।
ஆத்மநிக்ஷேப கார்ப்பண்யே
ஷட்விதா சரணாகதி: ।।

என்று ஆறங்கம் கொண்டதாகச் சரணாகதி பேசப்பட்டுள்ளது. உண்மையில் சரணாகதி பண்ணின ஒரு அதிகாரிக்குப் பிறக்கும் ஸ்வபாவங்களே இவை என்று ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை நிரூபித்துள்ளார். சரணாகதி பண்ணினபிறகு அடியார்களும் அவர்களோடு சேர்ந்திருப்பதுவுமே மிகவும் உகப்பாயிருக்கும். அவர்களைப் பிரிவதும் அபாகவதர்களின் தொடர்பும் வெறுக்கத்தக்கதாயிருக்கும். இந்தநிலை ஏற்பட்டு,

"தவ தாஸ்யஸுகைக ஸங்கிநாம்
பவநேஷ்வஸ்த்வபி கீடஜந்ம மே
இதராவஸதேஷு மாஸ்ம பூத்
அபி மே ஜந்ம சதுர்-
முகாத்மநா ।।"

என்று பாடியுள்ளார்.

'உன் அடிமையிலுள்ள இனிமையையே விரும்பும் மஹான்களின் திருமாளிகைகளில் புழுவாய்ப் பிறப்பினும் அதையே விரும்புகிறேன். அவ்வடிமைத் திறமற்றுத் திரிவாரின் வீடுகளில் ப்ரம்ம பதவி கிடைத்தாலும் இருக்க விருப்பமில்லை' என்கிறார்.

"அஹம் அத்யைவ மயா ஸமர்ப்பித:" 'நான் இன்றே என்னை தேவரீருக்கு அர்ப்பணிக்கிறேன்' என்று பரந்யாஸம் செய்தருளுகிறார். இன்னும் பல ச்லோகங்களில் தாம் செய்ததாகப் பல குற்றங்களைச் சொல்லித் தமது கார்ப்பண்யத்தை வெளியிடுகிறார்.

'நான் பண்ணின சரணாகதியைத் திருவுள்ளத்திலே கொள்ளாமல் எனது பாட்டனாரான ஸ்ரீமந்நாத முநிகளோடு எனக்குள்ள ஜ்ஞாநஸம்பந்தத்தையும் தேஹஸம்பந்தத்தையும் கடாக்ஷித்து என்னைப் பொறுத்தருள வேணும்' என்ற ப்ரார்த்தனையோடு ஸ்தோத்ரத்தைப் பூர்த்தி செய்தருளுகிறார்.

ஆக வேதம், இதிஹாஸம், புராணம், திவ்யப்ரபந்தம் இவற்றில் காணப்படும் சரணாகதியின் தத்துவமே ஸ்ரீஆளவந்தாருக்கும் பூர்ணமாக அங்கீகரிக்கப்பட்ட சரணாகதி தத்துவம் என்று தேறிற்று.



# ஸ்ரீ ஆளவந்தார் மகிமை

திரு. மா. சீதாராமன் - பெருங்கட்டூர்.

### தோற்றுவாய்:

உலக மக்களின் அமைதியான வாழ்வுக்குச் சமயமே உற்ற துணையாக அமைகிறது. சமயம் சிறப்படைவது ஆச்சார்யப்பெருமக்களாலேயே! இந்தியச் சமயங்களுள் தொன்மையும், முதன்மையும் வாய்ந்தது வைணவ சமயமே என்பது கற்றறிந்த சான்றோரின் முடிபு.

### ஆச்சார்யர் மரபு:

வைணவ சமயம் வளர்வதற்குக் காரணமாக அமைந்தவர்கள் ஆழ்வார்களும், ஆச்சார்யருமே! ஆச்சார்யர்களுள் ஸ்ரீமந்நாதமுனிகளே தலைவராக எண்ணப்படுகிறார். நாதமுனிகளின் திருவடிகளை அடைந்து உய்யக்கொண்டார் சேவகம் புரிந்தார். உய்யக்கொண்டார் திருவடிகளை ஆச்ரயித்துப் பன்னிரண்டு ஆண்டுகள் மணக்கால் நம்பிகள் வழுவிலா அடிமை செய்தார்.

### திருஅவதாரம்:

வைணவ தர்சனத்தை விளக்கமுறச் செய்து கொண்டு 'மணக்கால் நம்பிகள் வாழ்ந்து வந்தார். அந்தக் காலத்தில் ஸ்ரீமந்நாதமுனிகளின் திருக்குமாரரான ஈஸ்வர பட்டாழ்வாருக்கு ஆண்மகவு ஒன்று அவதாரம் செய்தது. அம்மகவே ஸ்ரீஆளவந்தார் என்று பிற்காலத்தில் வைணவ உலகத்தவரால் பெரிதும் மதிக்கப்பட்டு வந்தது.

தாது வருஷம் ஆடிமாதம் புதன்கிழமை உத்திராட நட்சத்திரத்தில் வாய்த்த அம்மகவினை மணக்கால் நம்பிகள் சென்று கண்டார். பன்னிரண்டாம் நாள் அம்மகவுக்கு யமுனைத்துறைவர் என்று நாதமுனிகளின் நியமனப்படியே மணக்கால்நம்பிகள் நாமகரணம் செய்வித்தார்.

வீரநாராயணபுரத்தில் அவதரித்த ஆளவந்தாரின் பாட்டனார் நாதமுனிகள்; திருத்தாயார் அரங்கநாயகி அம்மையார்; திருத்தந்தையார் ஈஸ்வர முனிகள்.

### நுண்ணறிவு:

யமுனைத்துறைவருக்கு உரிய சிறப்புகள் எல்லாம் உரிய பருவங்களில் நடந்தேறின. யமுனைத் துறைவர் இளமையிலேயே அதிமேதாவியாக விளங்கினார். வேதம் பயின்று வரும் போது ஒருமுறை கேட்டாலே போதும், இரண்டாம் முறை கேளாமலேயே முதலில் கேட்டவற்றை அப்படியே தம் மனத்துள் பதியவைத்துக் கொள்வார்.

### கலைபயிலல்:

இவ்வாறு கல்வி பயின்று வருங்கால், இவரின் திருத்தகப்பனார் திருநாட்டுக் கெழுந்தருளினார். எனவே, யமுனைத்துறைவரைக் காக்கும் முழுப்பொறுப்பும் திருத்தாயாரே ஏற்க வேண்டியிருந்தது. யமுனைத் துறைவர் தம் அவதாரத் தலமாகிய வீரநாராயணபுரத்திலேயே இருந்துகொண்டு, மகாபாஷ்ய பட்டர் என்றும் ஆசார்யரிடம் சாஸ்திரங்கள் பலவும் கற்று வரலானார்.

### வாதுக்குச் செல்லல்:

அக்காலத்தில், ஆக்கியாழ்வான் என்பவன் சோழநாட்டு அரசவைப் புலவனாக இருந்து வந்தான். அக்காலத்திய புலவர்களை அப்புலவன் வாதில் வென்று தனக்குக் கப்பம் கட்டிவருமாறு செய்வதனை வழக்கமாகக் கொண்டிருந்தான். அம்முறையில் சேவகன் ஒருவனை ஆக்கியாழ்வான் மகாபாஷ்ய பட்டரிடம் அனுப்பிவைத்தான்.

சேவகன் மகாபாஷ்ய பட்டரிடம் கப்பம் கேட்டான். ஆக்கியாழ்வான் கொடுத்தனுப்பிய ஓலையை மகாபாஷ்யபட்டர் கண்டார்; சிந்தை நொந்தார்; செய்வதறியாது திகைத்தார்.

இதைக் கண்ட யமுனைத் துறைவர் உள்ளம் துடித்தார்; ஓலையைப் பிடுங்கிக் கிழித்தெறிந்தார்.

நடந்தவற்றைச் சேவகன் ஆக்கியாழ்வானிடம் சென்று கூறினான். அதுகேட்டு ஆக்கியாழ்வான் வெகுண்டான்.

"பாடம் பயிலும் அந்த மாணவன் வெறுங்கவியா? சாத்திரம் வல்லவனா? என்பதை அறிந்து வா!" என்று அந்தச் சேவகனை மீண்டும் அனுப்பினான்.

சேவகன் யமுனைத் துறைவரிடம் வந்தான். ஆக்கியாழ்வான் கூறியவற்றைக் கூறினான்.

"யாம் வெறும் கவியும் அல லோம்! வெறும் சாத்தி ரம பயிலபவரும் அலலோம்! வாதிட வருகின்ற மதயானை களின் செருக்கை அடக்கவல்ல சிங்கமென்று அறிவீராக!" என் னும் பொருள்படும்படியான ஸ்லோகம் ஒன்றை எழுதிக்கொ டுத்தனுப்பினார்.

கடிதத்தைகண்ட ஆக்கியாழ் வான் பெரிதும் வியப்படைந் தான். இந்தச் செய்தியைச் சோழமன்னனிடம் சென்று அறி வித்தான். இதுகேட்ட சோழ மன்னன பல்லக்கு ஒன்றை அனுப்பி, யமுனைத்துறைவரை அழைத்துவருமாறு ஆணையிட் டான.

யமுனைத்துறைவர் பல்லக் கில் ஏறிச் சென்றார்; அரசனைக் கண்டார். "அரசவைப் புலவரு டன வாதம் செய்யத் தயாரா?" என்று அரசன் கேட்டான்.

"நல்ல நடுவர் இருந்தால் வாதம செய்யத்தயார்?" என்று யமுனைத்துறைவர் பதிலளித் தார்.

வாதப்போர் தொடங்கியது மன்னன் நடுவர்களை நியமித் தான். வாதப்போர் நடக் கும் வித்தியா மண்டபத் துக்கு அரசன் தன் தேவியுடன் வந்து அமர்ந்தான். வாதப் போர் தொடங்க மன்னன் ஆணையிட்டான்.

அப்போது அரசனுக்கும் தேவிக்கும் இடையே உரையா டல் ஒன்று நடந்தது. யமு னைத்துறைவரின் தோற்றப் பொலிவைக் கண்ட அரசமா தேவி "இவர் தோல்விஅடை யார்" என்ரு அரசனிடம் கூறி னாள்.

அரசனோ "நம் அரசவைப் புலவர் ஒருநாளும் தோல் வியடையார்" என்று அழுத் தம் திருத்தமாகக் கூறினான். மேலும் வெற்றிபெறும் புலவருக் குப் பாதிநாட்டைக் கொடுப் பதாகவும் வாக்குறுதி கொடுத் தான்.

வாதப்போர் தொடங்கியது. ஆக்கியாழ்வான் யமுனைத் துறைவரை நோக்கிக்கூறலா னான். "நீர் அன்று என்பதை நான் ஆம் என்பேன்! நீர் ஆம் என்பதை நான் அன்று என் பேன். இப்போட்டியில் தோற்ற வர் வென்றவரைத் தம் தலை மேல் சுமக்க வேண்டும்" என்று நிபந்தனை கூறினான்.

மூன்று செய்திகள்: "த்வந் மாதா நவந்த்யா" (உன் தாயார் மலடி அல்லள்), "ராஜா ஸார்வ பௌம:" (இம்மன்னன் பூமண்ட லம் முழுதும் ஆள்பவன்), "ராஜ பத்நீ பதிவ்ரதா" (இவ்வரசி கற் புடையவள்), என்று உலகிய லுக்கேற்ற மூன்று செய்திகளை யமுனைத்துறைவர் கூறினார்.

நிபந்தனைப்படி ஆக்கியாழ் வான் இம்மூன்றையும் மறுக்க வேண்டும். மறுக்கமுடியுமா?

வெட்கித் தலைகுனிந்தான்! 'தன்தாய் மலடிதான்' என்று மறுத்தால் அவையோர் நகைப் பாரே! 'பூமண்டலம் மழுவதை யும் மன்னன் ஆள்பவன் அல் லன்' என்று மறுத்தால் மன் னன் சீற்றத்துக்கு ஆளாக நேரி டுமே! 'இவ்வரசி கற்புடையவள் அல்லள்' என்று மறுத்தால் என்ன கதி நேரிடும்?

எனவே, யமுனைத்துறைவ ரின் மூன்று செய்திகளையும் மறுக்கமாட்டாதவனாய் வெட் கித் தலைகுனிந்தான் அரச வைப்புலவன். எனவே, அரச வைப்புலவன் தோல்வியுற்றான்.

## "ஆளவந்தீரோ!":

பின்னர் சாஸ்திரங்களிலும் வாதப்போர் நடந்தது. அவற் றிலும் யமுனைத்துறைவரே வெற்றியடைந்தார். அப்போது அங்குக்கூடியிருந்தோர் அனைவ ரும் மகிழ்ச்சியால் ஆரவா ரம் செய்தனர். வெற்றிபெற்ற யமுனைத்துறைவர்க்குப் பாதி யரசை நிபந்தனைப்படி மன் னன் அளித்துச் சிறப்புச் செய் தான். தோற்றவர் பணி செய் யவேண்டும் என்ற நிபந் தனையை யமுனைத்துறைவர் ஏற்க மறுத்துவிட்டார். முதியவ ரான ஆக்கியாழ்வானை அவ மானப்படுத்த யமுனைத் துறை வர் விரும்பவில்லை.

இவற்றையெல்லாம் கண்டு மகிழ்ந்த அரசமாதேவி யாகிய திருவரங்கத்தம்மையார் "என்னை ஆளவந்தீரோ!" என்று பாராட்டிச் சிறப்பித்தார்.

அன்று முதல் யமுனைத்து றைவருக்கு "ஆளவந்தார்" என் னும் சிறப்புத்திருநாமம் வழங்கி வரலாயிற்று.

## மக்கட்பேறு:

யமுனைத் துறைவர் தம் துணைவியாருடன் இனிதாக இல்லறம் நடத்தி வந் தார். அரசபோகங்களுடன் வாழ்க்கை நடத்திவந்த அவருக் குச் சொட்டை நம்பி, தெய் வத்துக்கரசுநம்பி, பிள்ளைய ரசு நம்பி, திருவரங்கப்பெருமாள் அரையர் என்னும் பெயர் களைக் கொண்ட நன்மக்கள் வாய்த்தனர்.

## மணக்கால்நம்பியின் ஆவல்:

இவற்றையெல்லாம் கேட்டு மகிழ்ந்த மணக்கால்நம்பிகள் ஆளவந்தாரைக் காண அவா வுற்றார். ஆனால், அரச போகங்களுடன் வாழ்ந்துவந்த ஆளவந்தாரைக் காண்பது என்பது அவ்வளவு சுலபமாக இல்லை. கட்டும் காவலும் மிகுந்த நிலை! ஆளவந்தாரைக் காணமுடியாமல் நம்பிகள் சிந்தை நொந்தார். அவரைக் காணும் உபாயம் குறித்துச் சிந்திக்கத் தொடங்கினார்.

## தூதுளைக்கீரை:

ஆளவந்தாரைக் காண மணக்கால் நம்பிகள் சிறந்த உபாயம் ஒன்றை மேற்கொண்டார்.

ஆளவந்தார் விரும்பியுண்ணும் பொருள் தூதுளை என்று அறிந்துகொண்டார். நாள்தோறும் மடைப்பள்ளிக்குத் தூதுளை கொண்டு வந்து கொடுத்தார். திடீரென்று ஒரு நாள் தூதுளைக்கீரை கொடுப்பதை நிறுத்தி விட்டார்.

எனவே, கீரை இல்லாததன் காரணத்தை ஆளவந்தார் கேட்டார். நாள்தோறும் கொண்டு வந்து தரும் முதியவர் இன்று கொண்டு வரவில்லை என்று சமையல்காரர் கூறினார். மீண்டும் அம்முதியவர் வந்தால், தம்மிடம் அழைத்து வருமாறு சமையல் காரருக்குக் கட்டளை பிறப்பித்தார்.

ஆளவந்தாரைக் காணவேண்டும் என்னும் அவா மணக்கால் நம்பிகளுக்கு மேலும் மேலும் எழுந்தது. எனவே, தூதுளைக் கீரையைக் கொண்டு செல்லும் பணியை மீண்டும் தொடங்கினார். மணக்கால்நம்பியை ஆளவந்தாரிடம் சமையல்காரர்கள் அழைத்துச் சென்றனர். ஆளவந்தாரின் தோற்றப் பொலிவைக் கண்டு நம்பிகள் ஆனந்த மடைந்தார். ஆளவந்தார் அவரை வணங்கி வரவேற்றுத் தக்க ஆசனமளித்து உபசரித்தார்.

"தேவரீர் எனக்கு நாள்தோறும் தூதுளை தந்தது ஏன்? என்னிடம் வேண்டுவது யாது?" என்று ஆளவந்தார் கேட்டார்.

"நாம் கொடுக்க வந்தோமே அன்றிக்கொள்ள வந்தோம் அல்லோம்! உம்முடைய முன்னோர்கள் தேடிவைத்த செல்வம் எம்மிடம் உள்ளது. அச்செல்வத்தை முழுவதுமாகத் தாங்கள் பெறும்வரை என்னை இங்கே வந்து போக அனுமதிக்க வேண்டும்" என்றார் நம்பிகள்.

"அப்படியே ஆகட்டும்" என்றார் ஆளவந்தார்.

## கீதோபதேசம்:

நாள்தோறும் பகவத்கீதையின் நுண்பொருள் புலனாகும் வண்ணம் பதினெட்டு அத்தியாங்களையும் நம்பிகள் ஆளவந்தாருக்கு உபதேசித்தருளினார். இவற்றைக் கேட்டுக்கேட்டுப் பரம்பொருளைக் காணவேண்டும் என்னும் ஆவல் ஆளவந்தாருக்கு அதிகரிக்கலாயிற்று. எனவே, பரம்பொருளை அடையும்வழியாது?" என்று கேட்க, சில ரஹஸ்யார்த்தங்களை ஆளவந்தாருக்கு மணக்கால்நம்பிகள் உபதேசித்து வந்தார்.

பால் ஏற ஏறத் தலைவணங்கும் நெல்போல, ஞானமிகுதியால் பரிபக்குவநிலையை ஆளவந்தார் பெறலானார். எனவே, அரச போகத்திலும் இல்லற இன்பத்திலும் இருந்துவந்த ஈடுபாடு குறைந்து கொண்டே வந்தது. இறைவனைக்காண வேண்டும் என்னும் எண்ணம் முதிர்ச்சி அடைந்தது.

## திருவரங்கச் செல்வம்:

இதுவே தக்க சமயம் என்று நம்பிகள் ஆளவந்தாரைத் திருவரங்கத்துக்கு அழைத்துச் சென்றார். "உம்பாட்டனாராகிய நாதமுனிகள் உமக்குத் தேடி வைத்த பெருஞ்செல்வம் இதுவே!" என்று திருவரங்கப் பெருமானைக் காட்டி நின்றார். அரங்கத் தம்மானின் பேரழகில் ஈடுபட்டுப் "பலகாலும் பழுதாகப்போயினவே" என்று உள்ளம் உருகி நின்றார் ஆளவந்தார். பின்னர் திருவரங்கத்தையே வாழ்விடமாகக் கொண்டு வாழ்ந்து வந்தார் ஆளவந்தார்.

## சீடர்கள்:

ஆளவந்தாரின் திருவடிகளையே அடைக்கலமாகக் கொண்டு பெரியநம்பி, திருக்கோட்டியூர் நம்பி, பெரிய திருமலைநம்பி, திருமாலை ஆண்டான், திருக்கச்சிநம்பி, வானமாமலை ஆண்டான், தெய்வவாரி ஆண்டான் முதலான இருபத்து மூன்று சீடர்கள் ஆளவந்தாரைச் சரண் அடைந்து சாஸ்திரங்கள் பலவும் பயின்று வந்தனர்.

ஒருநாள் மணக்கால்நம்பி ஆளவந்தாரிடம், "இன்னும் ஒரு ரஹஸ்யார்த்தம் குருகைக் காவல் அப்பனிடத்திலே உண்டு, அங்குச் சென்று கேளும்!" என்றார். அதற்கு ஆளவந்தார், "உமக்கு அது கிடைக்காமல் போனது ஏன்?" என்றார்.

"அந்த ரஹஸ்யார்த்தத்தைக் குருகைக் காவல் அப்பனிடத்தில் மட்டுமே உமது பாட்டனாராகிய நாதமுனிகள் சொல்லி

வைத்துப் போனார்!" என்று மணக்காலநம்பிகள் ஆளவந்தாருக்குக் கூறினார். சமயம் நோக்கியிருந்தார் ஆளவந்தார்.

### அப்பன் அளித்த திருமுகம்:

இதற்கிடையே மணக்கால்நம்பிகள் ஆளவந்தாரிடம் பலஇதமான வார்த்தைகளைச் சொல்லித் திருவரங்கத்தை விடாமல் பற்றி இருக்குமாறு நியமித்து, உய்யக் கொண்டார் திருவடிகளைச் சிந்தித்தவாறே மணக்கால் நம்பிகள் திருநாட்டுக்கெழுந்தருளினார். பின்னர் ஆளவந்தார் குருகைக் காவலப்பனிடம் சென்று யோகரஹஸ்யத்தை அருளிச்செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அடுத்த தைப்பூசத்தன்று வருமாறு குருகைக்காவலப்பர் திருமுகம் எழுதிக்கொடுத்தார்.

### திருவனந்தபுரக் காட்சி:

திருமுகம் பெற்றுக்கொண்ட ஆளவந்தார் திருவனந்தபுரம் சென்றார். அனந்தபதம ஸ்வாமிகளை மங்களாசாசனம் செய்து கொண்டு அங்கேயே வாழ்ந்து வந்தார். ஒருநாள், அப்பன் கொடுத்த் திருமுகத்தை எடுத்துப் பிரித்துப் பார்த்தார். யோக ரஹஸ்யம் கேட்க வேண்டிய நாள் அன்றுதான்!

### திருவரங்கம் சென்று சேர்தல்:

திருவனந்தபுரத்திலிருந்து திருவரங்கத்துக்கு அன்றே எப்படிச் செல்ல முடியும்? "புஷ்பக விமானம் ஒன்றைப் பெற்றிலயே" என்று வருந்தினார். பின்னர், அங்கிருந்தும் புறப்பட்டுத் திருவரங்கம் சென்று சேர்ந்தார். திருவரங்கப் பெருநகரில் சில காலம் வாழ்ந்து வரலானார்.

ஏக்கம்:

"வைணவ தரிசனத்துக்கு இனியாவருளர்" என்னும் ஏக்கம் ஆளவந்தாரின் மனதில் இருந்து கொண்டே வந்தது. அப்பொழுது, இராமாநுசருக்கு வில்லியுருவில் வந்து அருள் புரிந்த வரதராசப்பெருமானின் அருள்திறம் கேட்ட ஆளவந்தார் காஞ்சிக்குப் புறப்பட்டுச் சென்றார். அப்போது இராமாநுசர் யாதவப் பிரகாசரிடம் பாடம் பயின்று வந்தார். பாடத்திற்குத் தடைசெய்யக்கூடாதென்று கருதி இராமாநுசருக்கு அருளாசி வழங்கிக் கச்சிப் பெருமானைப் பணிந்து வணங்கித் திருவரங்கம் திரும்பினார் ஆளவந்தார்.

### திருநாடு அலங்கரித்தல்:

நாட்கள் சில சென்றன. இராமாநுசரைக் காண ஆவலுற்ற ஆளவந்தார் பெரியநம்பிகளைக் காஞ்சிக்கு அனுப்பி வைத்தார். பெரிய நம்பிகள் இராமாநுசரைக்கண்டார். ஆளவந்தாரின் ஆவலைக் கூறினார். பெரிய நம்பிகளும், இராமாநுசரும் காஞ்சியிலிருந்தும் புறப்பட்டு ஆளவந்தாரைக் காணத் திருவரங்கம் நோக்கிச் சென்றனர். இவர்கள் சென்று சேர்வதற்கு முன்பே, மணக்காலநம்பிகளின் திருவடிகளைச் சிந்தித்தவாறே ஆளவந்தார் திருநாட்டுக்கெழுந்தருளினார்.

### திருநாமங்கள்:

யமுனைத் துறைவர், யாமுனாசார்யர், வாதிமத்தேப சிம்மேந்திரர் என்னும் திருநாமங்கள் ஆளவந்தாருக்குண்டு.

### இயற்றிய நூல்கள்:

ஸ்தோத்திர ரத்னம், சித்தித் திரயம், அகண்டமாயாவாத கண்டனம், ஸ்ரீகீதாசாரசங்கிரகம், சதுச்சுலோகி முதலான நூல்களை இயற்றி உலகுக்கு உபகரித்தார். வைணவ தர்சனத்துக்குத் தகுதியான ஆளவந்தார் திருநாமம் உலகில் என்றும் நின்று நிலவும்.

ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿✿

## 'சிறு' லட்டு படி சேவா திட்டம்

திருமலைக்கு வருகை புரியும் சாதாரண யாத்திரிகப் பொது மக்களின் நன்மைக்காகவும் வேண்டுகோளின்படியும் மாதிரி 'லட்டு படி சேவா திட்டம்' ஒன்று அண்மையில் திருமலைக் கோயிலில் புகுத்தப்பட்டுள்ளது.

| தரிசன அனுமதி | கட்டணம் | பிரஸாதம் |
|---|---|---|
| 2 நபர்கள் | ரூ. 250/- | 10 லட்டுகள் |

இச்சேவைக்கான அனுமதி சீட்டுகள் திருமலை விஜயா வங்கிக்கு விற்பனைக் கூடுகளில் விற்கப்படும். சீட்டு வாங்கிய பக்தர்கள் தரிசனத்திற்காக வைகுண்டம் க்யூ கட்டிடத்தொகுதிக்கு 'ஆர்ஜிதம் நுழைவு' வாயிலாக அனுமதிக்கப்படுவர்.

# சதுச் ச்லோகியில் பிராட்டியின் பெருமை

ஸ்ரீ எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் - திருச்சி.
ஆசிரியர்: "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்"

நாதமுனிகளின் திருப்பேரராய் எம்பெருமானாரின் ஆசார்யர்களுக்கு ஆசார்யரான யாமுனாசார்யர் என்னும் ஆளவந்தார் எம்பெருமானைத்துதிக்கும் 65 ச்லோகங்களடங்கிய ஸ்தோத்ர ரத்தனத்தையும், பெரியபிராட்டியாரைத் துதிக்கும் நாலே சுலோகங்கள் கொண்ட சதுச் ச்லோகியையும் அருளிச்செய்தார். எம்பெருமானுக்குச் சரீரமாய், விசேஷணமாய், அவனுடைய ஸ்வரூபத்தை நிரூபித்துத் தருமவளாய், அவனால் உண்டான ஸத்தா ஸ்திதி ப்ரவ்ருத்திகளையுடையவளாய் இருக்கையாலே எல்லா ஆழ்வார்களும் தமது திவ்ய ப்ரபந்தங்களில் எம்பெருமானைச் சொல்லும் போது பிராட்டியையும் சேர்த்துப் படித்தார்களேயொழிய, பிராட்டிக்காக ஒரு தனிப்ரபந்தம் இடவில்லை.

இருந்தபோதிலும் பிராட்டியினுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களை அனைவரும் அறிந்து கொள்வதற்காக ,ஆளவந்தார் நாலே ச்லோகங்கள் கொண்ட இந்தச் சதுச்ச்லோகியை முதன் முதலில் பிராட்டியைப் பற்றிய ஸ்தோத்ரமாக அருளிச்செய்தார். இதை அடியொற்றியே எம்பெருமானாரும் கத்யத்ரயத்தில் பரப்பிரம்மமான எம்பெருமானுடைய பெருமைகளையெல்லாம் மூன்று கத்யங்களில் விரிவாக அருளிச்செய்வதற்கு முன், முதல் கத்யமான சரணகதி கத்யத்தின் முதல் சூர்ணையில பிராட்டியின் பெருமைகளைச் சுருககமாக அருளிச்செய்தார். அவருடைய சிஷ்யரான கூரத்தாழ்வானும் ஸ்ரீவைகுண்டஸ்தவம், அதிமாநுஷஸ்தவம், ஸுந்தர பாஹுஸ்தவம், வரதராஜஸ்தவம் என்னும் நான்கு ஸ்தவங்களிலும் நூற்றுக்கணக்கான சுலோகங்களில் எம்பெருமானுடைய பெருமையை அநுபவித்து, பதினொரு சுலோகங்களே கொண்ட ஸ்ரீஸ்தவத்தில் பிராட்டியின் பெருமையை அருளிச்செய்தார். அவரது குமாரரான ஸ்ரீபராசர பட்டரும் இருநூறு சுலோகங்களுக்கு மேற்பட்ட ஸ்ரீரங்கராஜ ஸ்தலத்தில் எம்பெருமானுடைய பெருமையை மிக விரிவாக அருளிச்செய்து, அறுபத்தொரு (61) சுலோகங்கள் கொண்ட ஸ்ரீகுணரத்ன கோசத்தில் பிராட்டியின் பெருமையை அருளிச்செய்தார். சைவ மதத்திற்குப் போட்டியாக சிவனைக் காட்டிலும் சக்தி பெரியவள் என்னும் சாக்த மதம் தோன்றியது போலே வைஷ்ணவத்திலும் பிராட்டி எம்பெருமானுக்குத் துல்யமானவள் அல்லது அவனைவிடப் பெரியவள் என்னும் வைஷ்ணவ சாக்த மதம் தோன்றிவிடக்கூடாது என்னும் விழிப்புணர்வாலேயே இப்படி ஆசார்யர்களனைவரும் பிராட்டியின் பெருமைகளைக் குறைவான ச்லோகங்கள் கொண்ட ஸ்தோத்ரங்களிலேயே அருளிச செய்தார்கள்.

இந்தச் சதுச் ச்லோகிக்கு, பெரியவாச்சான் பிள்ளையின் குமாரரான நாயனாராச்சான் பிள்ளை மணிப்ரவாள நடையில் மிக விரிவானதொரு வியாக்கியானமும், அவர் காலத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீவேதாந்த தேசிகன் வடமொழியில் சுருக்கமானதொரு பாஷ்யமும் அருளிச்செய்துள்ளனர். இவற்றின் துணை கொண்டு ஆளவந்தாரின் சதுச்ச்லோகியில் பிராட்டியின் பெருமைகள் எவ்வண்ணம் விவரிக்கப்பட்டுள்ளன என்பதைச் சுருக்கமாகக் காண்போம்.

"கல்யாண குணங்களால் நிறைந்தவளே! புருஷோத்தமனான பகவான் உனக்குப் பிரியமான கணவன்; நாகங்களுக்கு அரசனான ஆதிசேஷன் படுக்கை, வேதத்தை சரீரமாக உடையவனும் புள்ளரையனுமான பெரிய திருவடி ஆசனமாகவும் வாஹனமாகவும இருப்பவன்; உலகத்தை மோஹிக்கச் செய்வதான பிரக்ருதி உனக்கு முக்திரையாய் இருக்கிறது. தங்களுடைய மனைவிமார்களுடன் கூடிய பிரமன் சிவன் முதலிய தேவஸமூஹம் உன்னுடைய தாஸகணமாகவும், தாஸீகணமாகவும் இருக்கிறது; உன்னுடைய திருநாமமும் "ஸ்ரீ" என்பதேயாய் இருக்கிறது. இப்படிப்பட்ட பெருமைகள் பொருந்திய உன்னை (அறிவிலிகளான) நாங்கள் எப்படிச் சொல்லுவோம்" என்பது முதல் சுலோகத்தின் பொழிப்புரை.

## ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில்

### ஸ்ரீநிவாசாமங்காபுரம்

ஆர்ஜித ஸேவைகள் :

1. நித்ய அர்ச்சனை, (ஒரு வருடத்திற்கு) ரூ. 42/-
2. நிரந்தர நித்ய அர்ச்சனை, (ஆயுள் முழுவதும்) ரூ. 542/-
3. கல்யோணோத்சவம், (நாள் தோறும்) ரூ. 300/-
4. அபிஷேகம் (வெள்ளிக்கிழமைகளில் மட்டுமே) ரூ. 100/-

தளிகைகள் (நைவேத்தியங்கள்)

| | | | |
|---|---|---|---|
| 1. ததியோதனம் | ரூ. 75/- | 5. ஸீரா | ரூ.400/- |
| 2. புளியோதரை | ரூ.100/- | 6. தோசை(படி) | ரூ.400/- |
| 3. பொங்கல் | ரூ.200/- | 7. கேஸரிபாத் | ரூ.300/- |
| 4. சர்க்கரைப்பொங்கல் | ரூ. 35/- | 8. ஸாகரபாத் | ரூ.250/- |

மூன்றுநாட்களுக்கு முன்பேயே மேற்படி ஸேவைகள் மற்றும் தளிகைகளுக்கான தொகையினைச் செலுத்துதல் வேண்டும்.

(திருப்பதி - சித்தூர் நெடுஞ்சாலையில் திருப்பதியிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில் இத்திருத்தலம் உள்ளது).

## உதயாஸ்தமான ஸர்வ சேவா அறக்கொடை திட்டம்

### திருமலை

| | நன்கொடை ரூ. |
|---|---|
| வெள்ளிக்கிழமை தவிர்த்து மற்றைய எந்த நாளாயினும் | 1,00,000/- |
| வெள்ளிக்கிழமைகளில் | 3,00,000/- |

நன்கொடையாளரைச் சார்ந்தவர்கள் (மொத்தம் 6 நபர்கள்) காலை சுப்ரபாதம் முதற்கொண்டு ஏகாந்த சேவை வரையிலான எல்லா சேவைகளுக்கும் குறிப்பிட்ட நாளன்று அனுமதிக்கப்படுவர். அன்று நடைபெறும். மற்றைய ஆர்ஜித சேவைகளை கண்டு களிக்கவும் அனுமதிக்கப்படுவர்.

அன்பளிப்பு : ஒவ்வொரு ஆண்டும் ஒரு கல்யாணோத்ஸவ வஸ்த்ரம். 25 லட்டுகள், 5 வடைகள் வழங்கப்படும்.

"லோகத்திற்கு ஒரே ஈசுவரியாயிருப்பவளே! லோகங்களுக்கெல்லாம் ஸ்வாமியான எம் பெருமானுக்குப் பிரிய மஹிஷியாய் இருப்பவளே! கருணை கல்பவல்லியே! எந்த உன்னுடைய அளவற்றதும், இயற்கையாகவே பகவானுக்கு எப்போதும் அனுகூலமாயிருப்பதுமான பெருமையை, ஈசுவரனான உன்னுடைய வல்லபனும், தன்னுடைய பெருமையைப் போல் இவ்வளவென்று அளவிட்டறியமாட்டானோ, அப்படிப்பட்ட உன்னை தாசன் என்றும், சரணமடைந்தவன் என்றும் உன்னுடைய கருணையை அறியும் நான் பயமற்றவனாய்த் துதிக்கிறேன்" என்பது இரண்டாவது சுலோகத்தின் பொழிப்புரை.

"அந்தக் கடாக்ஷம் இல்லாமையாலே முன்நசித்துக் கிடந்ததான மூவுலகமும், இப்போது சிறிதளவு உன்னுடைய கருணை கடாக்ஷமாகிற அம்ருதவர்ஷத்தினால் அளவற்ற பெருமையை உடைத்தாகும்படி காப்பாற்றப்படுகிறது. மனிதர்களுக்கு ஐச்வர்யம், கைவல்யம், பரமபதம் இவைகளில் மேன்மையானது தாமரைக் கண்ணனின் மனத்துக்கினியவளான ஸ்ரீதேவியின் அருளில்லாமல் ஏற்படாதன்றோ" என்பது மூன்றும் சுலோகத்தின் பொழிப்புரை.

"ஆறு ஊர்மிகளற்றதாய், ஆநந்தமயமாய், பெரிய விபூதிகளை உடைத்தாய், தனக்கு மேலானதற்றதாய், பெரிதாயிருப்பதாலும் (பிறரைப்) பெரிதாகச் செய்வதாலும் பிரம்ம சப்தத்தாலே சொல்லப்படுவதாயிருக்கும் ஹரியினுடைய யாதொரு ஸ்வரூபமுண்டோ, அதைக் காட்டிலும் அந்த பகவானுக்கு மிகவும் பிரியமாயிருப்

பதும், கண்ணால் காணக்கூடிய தும், பிரம்ம சப்தத்தால் சொல லப்படுவதும், மிகவும் அத்புத மானதுமான யாதொரு ரூபம் உண்டோ இஷ்டப்படி விளை யாடும் எம்பெருமானுக்கு மற் றும் யாவை சில ரூபங்க ளுண்டோ, அந்த ரூபங்களெல் லாம் உனக்கு அசாதாரணங் களாய், தகுந்தவையாயிருக்கும் திவ்ய ரூபங்களால் நன்ருக ஆலிங்கனம் செய்யப்பட்டவை யென்று (ப்ரமாணங்கள்) சொல் லுகின்றன" என்பது நான்காம் சுலோகத்தின் பொழிப்புரை.

"ஹ்ரீச்சதே லக்ஷ் மீச்ச பத்ந்யௌ" (புருஷ ஸூக் தம்) [பரமபுருஷனான உனக்கு பூமி தேவியும் லக்ஷ்மிதேவி யும் பத்தினிகள்], "அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ" (நீளா ஸூக்தம்) [விஷ்ணுவுக்குப் பத் தினியாயிருக்கையாலே இவ்வு லகுக்கு ஈசுவரியாயிருப்பவள்] முதலான வேதவாக்கியங்களை யொட்டி விஷ்ணுவின் பத்தினி யாய் இருப்பதாலேயே இவ ளுக்கு உண்டான பெருமைகளை இந்த நாலு ச்லோகங்களிலும் அநுபவித்திருக்கிருர் ஆளவந் தார்.

பிராட்டி விஷயத்தில் அவள் 'ஜீவ வகுப்பைச் சேர்ந்தவளா', 'ஈசுவர வகுப்பைச் சேர்ந்த வளா' என்னும் சர்ச்சை பூரு வாசார்யர்கள் காலத்திலேயே விளைந்துள்ளது. ஸ்ரீவிஷ்ணு புராண வியாக்கியானத்தில் எம் பெருமானாருடைய சிஷ்யரான எங்களாழ்வான் என்னும் விஷ்ணு சித்தர், "இவள் ஸ்வ ரூபத்தில் அணுவாயிருப்பவள்" என்று கூறியிருக்கையால், "இவள் ஜீவவகுப்பைச் சேர்ந்த வளே" என்று திருவுள்ளம் பற் றியிருக்கிருர். பெரியவாச்சான் பிள்ளை பரந்த ரஹஸ்யத்தி லும், நாயனாராச்சான்பிள்ளை சதுச்ச்லோகி வியாக்கியானத் திலும். இவ்வண்ணமே அரு ளிச் செய்தனர். 'ஜகத் காரணமாய ஸர்வஜ்ஞதமாவாய ஸர்வேச்வரனாயிருப்பவன் ஒரு வனே' என்று எண்ணிறந்த வேத சாஸ்திர வாக்கியங்கள் முழங்குவதாலேயே, உபய விபூ தியைக் குறித்துப் பிராட் டிக்கு சேஷித்வமும், ஈசுவரத்வ மும் இருந்தபோதிலும், பெரும் பாலான நம்முடைய பூர்வா சார்யர்கள் இரண்டு ஈச்வரர்க ளைக் கொள்வது விசிஷ்டாத் வைதத்திற்கு முரண்படும் என்ப தாலே பிராட்டியை ஜீவகோடியி லேயே கொண்டு, அவளுடைய ஈசுவரத்வம் முதலான பெரு மைகளை எம்பெருமானுடைய நித்யேச்சையால் ஏற்பட்டவை என்று திருவுள்ளம் பற்றினார் கள். ஈசுவரனுக்கு அசாதாரண லக்ஷணமான ஜகத்காரணத்வத் திலும், மோக்ஷப்ரதத்வத்திலும் ப்ரதானமான அந்வயம் பிராட் டிக்கு இல்லை என்று நிர்ண யித்தார்கள்.

ஸ்ரீவேதாந்த தேசிகர் பிராட் டியை ஈசுவர வகுப்பிலேயே சேர்க்க வேண்டும் என்று திரு வுள்ளம் பற்றினார். ஏனெனில் விஷ்ணுபுராணம் முதலானவற் றில் பிராட்டி எல்லாவுலகையும் வியாபித்திருப்பவளாகச் சொல் லப்படுகிருள். உலகனைத்துக் கும் பெருமாளும் பிராட்டியு மான் மிதுனமே சேஷி (கைங்கர் யம் கொள்ளும் ஸ்வாமி) என்று எல்லாப் பூர்வாசார்யர்களும் ஒப்புக்கொள்கையால் இவளை ஈசுவர வகுப்பில் சேர்ப்பதே தக் கது. அனைவருக்கும் சேஷி யாயிருக்கை பிரம்மமான ஸர் வேச்வரனுக்கு லக்ஷணம். அவ னையொழிந்த மற்றவர்களுக்கு சேஷியாயிருக்கை ஈசுவரியான இவளுக்கு லக்ஷணம். ஜகத் காரணத்வம் முதலான பிரம்ம லக்ஷணம் பிரம்மமான எம்பெ ருமான் ஒருவனுக்கே உரியது. ஆகையால அவனே ஸர்வேச் வரனாகவும், ஒத்தாரும் மிக்கா ரும் இல்லாதவனாகவும் ஆகி ருன் என்பது தேசிகன் திரு வுள்ளம்.

கீதா பாஷ்யத்தின் தொடக் கத்தில் பிராட்டியைப் பற்றிய, "அநவதிகாதிசய - அஸங்க்யேய கல்யாண குணகண - ஸ்ரீவல லப:" என்னும் தொடரில் "அந வதிகாதிசய" என்னும் பதத்தை விவரிக்கும் போது "பிராட்டி யின் கல்யாண குணங்கள் எல் லையற்ற மேன்மையை உடை யவை என்று கூறியதால், ஈசுவ ரனைத் தவிர்ந்த மற்ற அனை வரையும் நியமிக்கவல்ல இவ ளுடைய நியமன ஸாமர்த்யம் ஈசுவரனுக்கு இஷ்டமாகையால் இரண்டு ஈசுவரர்கள் முதலான தோஷம் இல்லை; 'விஷ்ணுவுக் குப் பத்தினியாயிருப்பதால் இவ்வுலகிற்கு ஈசுவரியாயிருக்கி ருள்' என்னும் வேத வாக்கி யத்தின்படி விஷ்ணுவுக்குப் பத் தினியாயிப்பதாலன்ரே இவள் அனைத்துலகையும் நியமிக்கி ருள். ஸர்வ பூதங்களுக்கும் ஈசு வரி என்னும் ஸ்ரீஸூக்த வாக் கியத்தில், (யாருக்கு ஈச்வரி என்னும் கேள்வியெழ) 'ஸர்வ பூதங்களுக்கும்' என்று நிய மிக்கப்படுபவர்களைப் பிரித் துச் சொல்லியிருப்பதால், ஈச்வ ரபத்னியென்று பொருள்கொள் ளமுடியாது என்பது உண் மையானாலும், முன் எடுத்த (அஸ்யேஸாநா ஜகதோவிஷ்ணு பத்நீ) எனும் வாக்கியத் தின் பலத்தாலே, இவ்வாக்கியத் திலும் விஷ்ணுபத்தினியாயிருக்

கையாலே, இவள் ஈசுவரியாகிறாள் என்று கொள்ளவேண்டும்'' என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை தேசிகன் அருளியுள்ளார்.

சரணாகதி கத்யத்தில் பிராட்டியைப் பற்றிய முதல் சூர்ணையில், ''அநவதிகாதிசய'' என்னும் பதத்தை விவரிக்கும்போது பிராட்டிக்கு எம்பெருமானோடு உள்ள பலவகையான ஸாம்யத்தை விவரித்துவிட்டு ''பிராட்டிக்கு எம்பெருமானோடு பல வகையில் ஸாம்யம், கூறுவது, எம்பெருமான் ஒத்தார் மிக்காரையில்லாதவன் என்பதோடு முரண்படாது; நேர்மாறாக அவன் ஒத்தார் மிக்காரையில்லாதவன் என்பதையே உறுதிப்படுத்தும்; எப்படியெனில், இவ்வண்ணமாகப் பல பெருமைகளில் தன்னோடு ஒத்த பத்தினியோடு கூடியிருக்கை (பிராட்டியையுள்ளிட்ட) வேறு எவர்க்கும் இல்லையே; அப்படியிருந்தால் தானே இவனுக்கு ஒத்தாரோ மிக்காரோ உண்டோ' என்று ஐயுறமுடியும். ஸ்ரீராமாயணத்திலும் ''ஜனகராஜன் திருமகளைத் தனக்கென இட்டுப் பிறந்த (ஸ்ரீராமபிரானாகிற) தத்துவத்தின் பெருமை அளவிடவொண்ணாததன்றோ'' என்று இவ்விஷயம் விளக்கப்பட்டதன்றோ; இவ்வண்ணமாகப் பிராட்டியின் சீலாதி குணங்கள் எல்லையற்ற மேன்மையை உடையவையானாலும், 'ஒத்தாரும் மிக்காருமில்லாதவன் எம்பெருமான்' என்று முழங்கும் ச்ருதிவிரோதம் வராது' என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை ஸாதித்திருக்கிறார் ஸ்ரீதேசிகன்.

சதுச்ச்லோகி இரண்டாவது ச்லோகத்தின் பாஷ்யத்தில் ''ஸாத்வத ஸம்ஹிதையில் பிராட்டி பெருமானோடு ஒத்தவள் என்று கூறியிருப்பது ச்ருதி, ஸ்ம்ருதிகள் (ஸம்ஹிதையின்) முன்பின் பகுதிகள் முதலானவற்றில் பிரசித்தமான பத்னீத்வம் (பாரதந்த்ர்யம்) முதலானவற்றுக்கு அனுகுணமாகவே நயனம் செய்யத்தக்கது. மேலும், முக்தாத்மாவுக்கு ச்ருதி ஸ்ம்ருதி முதலானவற்றில் மேலான ஒற்றுமை சொல்லப்பட்டிருந்த போதிலும், 'ஜகத் வ்யாபாரவர்ஜம்' என்னும் ஸூத்ரத்தில் சொல்லப்பட்ட லக்ஷணமாயிருக்கும் தன்மைகளில் வேறுபாடு எப்படி நிலைநிறுத்தப்படுகிறதோ, அப்படியே இங்கும் வேறுபாடு உண்டு. 'பெருமானும் பிராட்டியும் வேறு லக்ஷணமுடையவர்' என்று (ஸாம்யத்தைக் கூறும்) அந்த ஸாத்வத ஸம்ஹிதா வாக்கியத்திலேயே சொல்லப்பட்டதன்றோ'' என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை ஸ்ரீதேசிகன் அருளியுள்ளார்.

மேலும் ''ப்ராஹ்ம புராணத்தில் லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமத்தில் 'அனைவரிலும் மேம்பட்டவள்', 'அனைவரிலும் உயர்ந்தவள்', 'அனைவருமாய் இருப்பவள்', 'உபமான மற்றவள்' என்னும் நாமங்கள் படிக்கப்படுகின்றன. 'பரமாத்மாவுக்கு ஸமமானதோ அல்லது மேம்பட்டதோ ஒன்றும் இல்லை' 'எவனைக் காட்டிலும் மேலானது எதுவும் இல்லையோ', ஈச்வரர்க்கெல்லாம் மேலான மஹேச்வரனாய் இருக்கும் அவனை', 'அசேதநப் பொருள்களையும், ஜீவர்களையும் நியமிக்கும் தேவன் ஒருவனே', 'இவ்வுலகிற்கு ஒருவனே அரசன்', 'அசைவனவும் அசையாதவனவுமான எல்லாப் பொருள்களையும் நியமிப்பவன் ஒருவனே', 'ஒருவனே நியமிப்பவன். நியமிக்கும் இரண்டாவது பொருள் கிடையாது. 'அனைத்தையும் நியமிப்பவன் விஷ்ணுவே' முதலான ச்ருதி ஸ்ம்ருதி வாக்கியங்களையொட்டி எம்பெருமானைத் தவிர்ந்த மற்றவர்களைக் காட்டிலும் பிராட்டியின் பரத்வத்தை அந்த நாமங்கள் கூறுவன என்றே கொள்ளவேண்டும்'' என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளையும் ஸ்ரீவேதாந்த தேசிகன் சதுச்ச்லோகீ இரண்டாவது ச்லோக பாஷ்யத்தில் அருளியுள்ளார்.

இவற்றிலிருந்து ஸ்ரீதேசிகன் பிராட்டியை எம்பெருமானோடு ஒத்த ப்ரஹ்மம் என்றோ ஒத்த ஈச்வரி என்றோ திருவுள்ளம் பற்றவில்லை என்று தெளிவாக விளங்குகிறது. அவள் ஸ்வரூபத்தில் விபுவாகையாலே ஜீவவகுப்பில் சேர்ந்தவளல்லள். ஈஸ்வர வகுப்பிலேயே சேர்ந்தவள். அவளுக்கு மோக்ஷாபாயத்வத்திலும் அந்வயம் உண்டு'' என்றே திருவுள்ளம் பற்றினார்.

''ஜீவர்களாகிற குழந்தைகளைப் பரமாத்மாவான தந்தையோடு சேர்ப்பிக்கும் புருஷகார பூதையாகிறாள் பெரிய பிராட்டியார். இருவருமான சேர்த்தியிலேயே ஜீவர்கள் கைங்கர்யம் செய்ய வேண்டும்'' என்பது எல்லா ஆசார்யர்களும் ஒருமுகமாக ஏற்றுக்கொண்டிருக்கும் நிர்ணயம்.

இத்தகைய பிராட்டியின் பெருமையை உணர்ந்து அவளைப் புருஷகாரமாகப் பற்றி எம்பெருமானை அடைந்து உய்வு பெறுவோமாக.



# ஆளவந்தார் ஸ்தோத்ரத்தில் எம்பெருமானின் கல்யாண குணங்கள்

வித்வான் ஆர். நரஸிம்ஹாசாரியர் - ஸ்ரீரங்கம்.

முகவுரை :

திருமாமகள் கேள்வனாகிய ஸ்ரீமந் நாராயணனை பிரம குருவாகக் கொண்ட ஸ்ரீவைஷ்ணவ மதம் வைதிக மதங்களில் சிறந்ததாகும். "ஸர்வேஷாமேவ தர்மாணாம் உத்தமோ வைஷ்ணவோ விதி:" என்கிறது பாத்ம புராணம். குலபதியான நம்மாழ்வார் தொடங்கி இன்றுவரை வளர்ந்து செழித்த மதம். நாதமுனி, ஆளவந்தார், பெரிய நம்பி என்று ஓராணவழியாய் வந்த இந்த ஸம்ப்ரதாயம் இராமாநுசரால் வளர்க்கப் பட்டு எம்பெருமானார் தரிசனம் என்றும், விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம் என்றும் போற்றப் பெறுகிறது. மெய்யான சித்து அசித்து இரண்டையும் மெய்யாகக் (உடலாக) கொண்டவனும், தோஷங்கள் இல்லாதவனும், நற்குணக் கடலானவனும், திருத்துழாய் மாலை மார்வனும், புட்கொடியுடைய கோமானுமாகிய ஸ்ரீய: பதியையே முழுமுதற் கடவுளாகக் கொண்டது இந்த ஸித்தாந்தம்.

## ஸ்தோத்ர ரத்னம்

புராண ரத்னம் (விஷ்ணு புராணம்) மந்த்ர ரத்னம் (த்வய மந்த்ரம்) ஆளவந்தார் ஸ்தோத்ரம் (ஸ்தோத்ர ரத்னம்) மூன்றையும் ரத்ன த்ரயம் என்று வைணவ பெரியோர்கள் கொண்டாடுகிறார்கள். இந்த ஸ்தோத்ர ரத்னம் எல்லா ஆசார்யர்களுக்கும் ஸ்தோத்ரம் செய்வதற்கு முன்னோடியாக அமைந்தது. ஆளவந்தார் ஸ்தோத்ரத்திலிருந்து பல ச்லோகங்களை எழுத்து எழுத்தாக எடுத்து, யதிராஜர் தம்முடைய "கத்ய த்ரயத்தில்" அருளிச்செய்துள்ளார். பல பூர்வாசார்யர்கள் இதற்கு உரை எழுதியுள்ளனர்.

"ஜாதே ஜாதே யத் உத்க்ருஷ்டம் தத் ரத்னமிதி கத்யதே" என்கிறபடியே ஸ்தோத்ரங்களிலே தலைசிறந்ததாகையாலே ஸ்தோத்ர ரத்னம் எனப்படுகிறது. ரத்னமானது விலை உயர்ந்ததாகவும் தலையாலே தாங்கப்படுவதாயும் இருப்பது போல் இந்த நூலும் விலை மதிப்பிடமுடியாததாகவும் சிரஸாலும் உள்ளத்தாலும் தரிசிக்கப்படுவதாக உள்ளது.

## குணக்கடல்

குணங்கள் நிறைந்திருப்பினும், மேன்மை இல்லாவிடில், அவைகள் நிறம் பெறுவதில்லை. குணங்கள் இல்லாத மேன்மைக்கும் பெருமை இல்லை. எம்பெருமானுடைய மேன்மையும் எளிமையும் (பரத்வ ஸௌலப்யங்கள்) கலந்து பேசப்படுகிறது. ஸ்ரீபாகவதத்தில், "த்விஷட்குணயுதாத் அரவிந்த நாபாத்" என்று சுக மஹரிஷி கூறியுள்ளார். (பத்மநாபப் பெருமாளுக்குப் பன்னிரண்டு குணங்கள்) "ஆந்ருசம்ஸ்யம் அநுக்ரோச ச்ருதம் சீலம் தயா சம:" என்று வால்மீகி முனிவர் பரத்வத்துக்குச் சேர்ந்த - "ஜ்ஞான, சக்தி, பல, ஐச்வர்ய, வீர்ய, தேஜஸ்" என்கிற ஆறு குணங்களுக்கு எதிர்த் தட்டாய் ஸௌலப்யத்திற்கு அநுகுணமான ஆறு குணங்களைக் காட்டினார். அது போல ஸௌலப்யத்துக்குச் சேர்ந்த பன்னிரண்டு குணங்களைக் காட்டுகிறார் யாமுனாசாரியர்.

### (1) வசீ

(அ) ஸமஸ்த சேதநாசேதந ரூபமான ப்ரபஞ்சத்தை தன் வசத்திலே நடத்திக்கொண்டு போருமவன்.

(ஆ) தன் திருவடிகளுக்கு அநுகூலராயிருப்பவருக்குத் தான் வசப்பட்டுத் தாழநிற்பவன். சக்ரவர்த்தித் திருமகன் விச்வாமித்திரரின் ஆணைக்கு அடிபணிந்துவந்தார். கண்ணபிரான் பாண்டவர்களுக்கு தூது போனான். பார்த்தனுக்கு ஸாரதியாய் நின்றான்.

"அவனே பின் ஓர் தூது
ஆதிமன்னர்க்காகி,
பெருநிலத்தார் இன்னார் தூதன்
என நின்றான்"

என்றும்,

"பற்றலர் வீயக் கோல் கையில்
கொண்டு

பார்த்தன் தன் தேர்முன்
நின்றானை"

என்றும் திருமங்கையாழ்வார் அநுபவம்.

"அநந்யாதீநத்வம் தவ கில ஜகுர் வைதிக கிர:
பராதீநம் த்வாம் து ப்ரணத பரதந்த்ரம் மநுமஹே!"

வரதராஜ ஸ்தவத்தில் கூரத்தாழ்வான்

ஆச்ரித பரதந்த்ரனாயிருக்கும் இருப்பு பிறருக்காக என்றால் தட்டிக்கேட்பார் இல்லாமையாலே ஸ்வதந்த்ரனுடைய காரியமாயிருக்கும்' என்கிறார் பெரியவாச்சான்பிள்ளை.

## (2) வதாந்ய:

தன்னையும், தன் உடைமையையும் ஆச்ரிதர்க்குக் கொடுக்கும் ஔதார்யம். (வள்ளல் தனம்.) "ய ஆத்மதா பலதா" (தன்னையும் கொடுத்து, தன்னை அநுபவிக்கும் மனோ பலத்தையும் கொடுக்கிறான்.) தன்னிடம் பலனை வேண்டுவாரையும் உதாரா: என்னும் வண்மை உடையவன். நாரதர் புண்டரீகனிடம் கூறியது:

"ஸ்ரீமந்நாராயணனிடம் மனதை வை. வேண்டியவற்றைக் கொடுப்பதற்கு அவனைக் காட்டிலும் பெரிய வள்ளல் யார்?"

"எனக்கே தன்னைத் தந்த கற்பகம்"

என்று அருளிச் செய்துள்ளார் நம்மாழ்வார்.

## (3) குணவான்:

இங்கு குண சப்தம், பொதுவான குணங்களைக் கூறாமல் ஸௌசீல்ய குணத்தைக் காட்டுகிறது. அடியார்கள் தங்கள் தேவைகளைப் பெற்றுப் போகவரும் பொழுது, தங்கள் சிறுமையையும் எம்பெருமானின் பெருமையையும் பார்த்து அகலாதிருக்கும்பொருட்டு, தன் மேன்மை பாராமல் தாழ்ந்தவர்களோடும் புரையறக் கலந்து பரிமாறும் சீல குணமுடையவன். சக்ரவர்த்தித் திரு மகன் குஹப் பெருமாளை பார்த்து உகந்து "தோழன் நீ எனக்கு" என்று சொன்னதாகக் கூறுகிறார் திருமங்கைமன்னன்.

"பெருமாள் ஸ்ரீசபரி கையாலே அமுது செய்தருளினார்".

- ஸ்ரீவசன பூஷணம்.

## (4) ருஜு:

ஆச்ரிதர் விஷயத்தில் உள்ளம் உரை, செயல் மூன்றிலும் ஒரு படிப்பட்டிருக்கை. சூர்ப்பனகையின் கேள்விக்கு ராமபிரான் பதிலளித்தான் என்று கூறுமிடத்து வால்மீகி "ருஜு புத்தியா ஸர்வம் ஆக்யாதுமுபசக்ரமே" என்கிறார். (பெருமாள் நேர்மையான புத்தியுடையவர். வஞ்சக எண்ணம் இல்லை. எனவே நேர்மையாக பதிலளித்தார்.)

## (5) சுசி:

அடியார்களுக்கு உதவி செய்யும்பொழுது ஒரு பயனும் கருதாது நிர்ஹேதுகமாக (காரணம் ஏதுமின்றி) செய்யும் தூய உள்ளமுடையவன் பக்தன் கொடுக்கும் பொருளின் ஏற்றத்தாழ்வு பாராமல் பத்துடை அடியவர்க்கு எளியனாய் இருக்கை. இருள் தருமா ஞாலத்தில் நித்ய ஸம்ஸாரியாயிருப்பவர்களை தனக்கும் அவர்களுக்கும் உள்ள ஸம்பந்தத்தை மட்டுமே காரணமாகக் கொண்டு நித்ய ஸூரிகளோடு சேர்க்க வல்ல தூய்மை.

## (6) ம்ருது:

அடியவர்களுடைய பிரிவை ஸஹிக்கமாட்டாத மெல்லிய மனமுடையவன். ஸுகுமாரமான சரீரம் என்று பொருள் கொள்ளலாமாயினும், இது ஆத்ம குணங்களைச் சொல்லும் ப்ரகரணமாகையாலே, ஆச்ரிதரின் பிரிவில் ஏற்படும் மனச்சோர்வையே ம்ருது சப்தம் காட்டுகிறது. சீதையைப் பிரிந்து ஒரு நொடியும் உயிர் வாழமாட்டேன் என்று சக்ரவர்த்தித் திருமகன் அருளிச்செய்துள்ளார்.

குற்றம் செய்தவர்களும் சடக்கென்று பற்றலாம்படி இருப்பவன். "ராகவன், தஞ்சமென்று வந்தவரைக் காப்பது தர்மம் என்று அறிந்தவர். சரணாகதனுடைய குற்றங்களையும் நற்றமாகக் கொள்பவன். உயிர்வாழ விரும்பினால் அவனுடன் நட்புக் கொள்ளக்கடவாய்'' என்று பிராட்டி ராவணனுக்கு புத்திமதி சொன்னாளல்லவா?

## (7) தயாளு:

ஆச்ரிதர்களுடைய துயரைத் தாங்கிக் கொள்ள முடியாதவன். தயை உடையவன் தயாளு. பிறர் துன்பம்கண்டு பொறுக்க வொண்ணாது தானும் துக்கப் படுகை. அயோத்யா வாஸிகளின் துன்பங்கண்டு பெருமாளும் துக்கப்பட்டதாக வால்மீகி குறிப்பிடுகிறார்.

மாதாவின் திருமுலைத் தடத்தைத் தீண்டிய சிறு காக்கையைக் கொல்லாது உயிர் அளித்தது அவனுடைய க்ருபை அல்லவா? ("க்ருபயா பர்ய பாலயத்")

## (8) மதுர:

வேதம், "ரஸோவை ஸ:" என்றும், "ஆநந்தோ ப்ரஹ்ம" என்றும் சொல்லுகிறது. "வாக்கினாலும் திருமேனியினாலும்

இனியனாய் இருப்பவன்" என்கிறார் வேதாந்த தேசிகன். "தேனில் இனிய பிரானே" என்கிறார் பெரியாழ்வார்.

"இனியவன் மாயன் என
உரைப்பரேலும்
இனியவன் காண்பரியனேலும்-
இனியவன்
கள்ளத்தால் மண்கொண்டு
விண்கடந்த பைங்கழலான்
உள்ளத்தினுள்ளே உளன்."

என்கிறார் பேயாழ்வார்.

இப்பாசுர உரையில், "காண இனியவனாயினும் அறிய வொண்ணாதவன், அல்லது நம்மை மாயையில் கட்டி வைத்திருப்பவன்" என்றும் பொருள் கொள்ளலாம் என்கிறார் பெரியவாச்சான்பிள்ளை. "ப்ரிய வாதீச பூதானாம்" (பிராணிகளிடம் இனிமையாக பேசுபவன்) என்று வால்மீகியும், "ஸாக்ஷாந் மன்மத மன்மத:" (அழகான மன்மதனைக் காட்டில் அழகு படைத்தவன்) என்று சுக மஹரிஷியும் கூறியுள்ளனர்.

## (9) ஸ்திர:

ஆச்ரித ரக்ஷணத்தில் அசைக்க முடியாதபடி உறுதியாயிருப்பவன். தன்னைச் சரணமடைந்த விபீஷணனை அங்கீகரிக்கும்போது, சுக்ரீவன் முதலான வானர முதலிகள் கலக்கினாலும் கலங்காதவனாயிருந்தான். "மித்ர பாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந". சிறிதே அநுகூலனாக வந்தவனை என்னால் விடமுடியாது என்று ராமபிரானுடைய ஸ்திரமான நிலையைக் காட்டினார் வால்மீகி. "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல், என்னடியார் அது செய்யார். செய்தாரேல் நன்று செய்தார்" என்றபடி பிராட்டியினாலும் மாறுபடுத்த முடியாத உறுதியை உடையவன். அல்லது, ஆச்ரிதர் எதுணை ப்ராதி கூலங்கள் செய்தாலும விகாரமடையாதவன்.

## (10) ஸம:

அறிவினாலும், குணத்தினாலும், ஒழுக்கத்தினாலும் வெவ்வேறுபட்டவர்களும் பற்றலாமபடி ரக்ஷணத்தில் வாசியின்றி ஸமமாயிருப்பவன். "ஸர்வலோக சரண்யன்" என்றார் வால்மீகி. "நான் அனைவர்க்கும் ஸமமாகப் பற்றும்படி இருப்பவன்" என்கிறார் பகவத்கீதையில் கண்ணன். "ஈடும் எடுப்பும் இல் ஈசன் மாடு விடாது என் மனனே" (ஈடு - புறக்கணித்தல்; எடுப்பு - அங்கீகரித்தல்) என்றும் "கொள்கை கொளாமை இலாதான்" (கொள்கை - அங்கீகரித்தல்; கொளாமை - ஏற்காமை) என்றும் நம்மாழ்வார் திருவாக்கு.

## (11) க்ருதீ:

தனக்காகச் செய்துகொள்ள வேண்டியது ஒன்றுமில்லையாயினும், தன்னை ஆச்ரயித்தவர்களின் காரியமெல்லாம் தன் காரியமாக நினைப்பவன். ஆச்ரிதர்கள் தன்னைப்பற்றினால் இழந்தார்கள் பெற்றார்கள் என்று இராதே தன் பேறாகக் கொண்டிருப்பவன். விபீஷணனை முடிசூடுவித்து தன்காரியம் செய்து முடித்ததாக நினைத்து ராமபிரான் மகிழ்ந்தார் (விஜ்வர: ப்ரமுமோத:) என்கிறார் வால்மீகி. "என்னை அடிமை கொள்ள வேணும். நானும் தன்யனாவேன். உம்முடைய காரியமும் நடந்ததாகும்" என்கிறார் இளைய பெருமாள்.

## (12) க்ருதஜ்ஞ:

தான் ஆச்ரிதர்களுக்கு உதவிகள் பல செய்தாலும், அவர்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | வசீ | நியந்த்ருத்வம் ஆச்ரித பாரதந்த்ர்யம் | அனைவரையும் ஆளுதல். அடியவர்களுக்கு வசப்பட்டிருத்தல். |
| 2. | வதாந்ய: | ஔதார்யம் | தன்னையே கொடுக்கும் வண்மை. |
| 3. | குணவான் | ஸௌசீல்யம் | தன் பெருமை பாராது தாழ்ந்தாரோடு புரையறக் கலக்கை. |
| 4. | ருஜு: | ஆர்ஜவம் | முக்கரணங்களாலும் ஒரு படிப்பட்டிருத்தல். |
| 5. | சுசி: | பாவநத்வம் | தூய்மை. |
| 6. | ம்ருது: | விச்லேஷாஸஹத்வம் | பிரிவை ஸஹியாமை. |
| 7. | தயாளு: | பரதுக்காஸஹத்வம் | பிறர் துன்பம் ஸஹியாமை. |
| 8. | மதுர: | போக்யத்வம் | இனிமை. |
| 9. | ஸ்திர: | அக்ஷோப்யத்வம் | கலங்காமை. |
| 10. | ஸம: | ஸமத்வம் | ரக்ஷணத்தில் ஸமனாய் இருத்தல். |
| 11. | க்ருதீ | க்ருதித்வம் | ஆச்ரிதர் காரியத்தை தன் பேறாகக் கருதுதல். |
| 12. | க்ருதஜ்ஞ: | க்ருதஜ்ஞத்வம் | சிறிய ஆநுகூல்யத்தையும் பெரிதாக நினைத்தல். |

முன்பு ஸ்வல்பமாகச் செய்த ஆநுகூல்யத்தையே பெரிதாக நினைத்திருப்பவன். அவர்க ளின் அபராதங்களையும் அறி யான். ஸ்ரீஸஹஸ்ரநாமத் தில் "அவிஜ்ஞாதா ஸஹஸ் ராம்சு:" (அடியார்கள் குற்றங் களை அறியாதவர். அள வற்ற ஞானங்களை உடைய வர்.) என்று கூறப்பட்டுள் ளது. "ப்ரபந்நாபராத அபரி கணநம் குண ஏவ" (அடியவர்க ளின் குற்றங்களை நினையாதி ருத்தலே குணம் ஆகும்) என்று ஸ்ரீபராசர பட்டர் அருளிச்செய் துள்ளார். தான் பண்ணின உபகாரமும் அறியான்.

செய்த குற்றங்களை நினைக் காமல், செய்த உதவிகள் சிறிதா யிருப்பினும் அவற்றை பெரி தாக நினைத்து மகிழ்ந்திருப்ப வன் இராமபிரான் என்று ராமா யணம் காட்டுகிறது. திரௌ பதிக்கு எல்லா உதவிகள் செய்தும், அவளுக்கு நான் ஒன்றும் செய்யப்பெற்றிலேனே என்று கண்ணன் பரிதாபப் பட்டு சொன்ன சொல்லை அநு ஸந்திப்போமாகில், அவனை விட க்ருதஜ்ஞன் வேறு ஒரு வர் உண்டோ? "ஒன்றுண்டு செங்கண்மால் யான் உரைப் பது, உன் அடியார்க்கு என் செய்வன் என்றே இருத்தி நீ" என்கிறார் நம்மாழ்வார். இங் ஙனே பன்னிரண்டு திருக் குணங்களைச் சொல்லி, இப் படிப்பட்ட ஸமஸ்த கல்யாண குணங்களுக்கும் நீ அமுதக்கட லாய் இருக்கிறார் என்று கூறி தலைக்கட்டுகிறார்.

வசீ வதாந்ய: குணவான் ருஜு: சுசி:
ம்ருதுர் தயாளு: மதுர: ஸ்திர:
ஸம: ।
க்ருதீ க்ருதஜ்ஞ: த்வமஸி ஸ்வபாவத:
ஸமஸ்த கல்யாண
குணாம்ருதோததி: ।। ✿

# வாராந்திர சேவைகள் மற்றும் உத்ஸவங்கள்

| | |
|---|---|
| 1) சிறப்பு பூஜை | (திங்கட்கிழமைகளில்) ரூ. 3000/- காலை 6-00 மணிக்கு. 5 நபர்கள் அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 5 பெரிய லட்டு கள், 5 வடைகள். |
| 2) அஷ்டதளபாத பத்மாராதனா சேவை : | (செவ்வாய்க்கிழமைகளில்) ரூ. 3500/- காலை 5-30 மணிக்கு. 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர். |
| 3) ஸகஸ்ர கலஸாபிஷேகம் | (புதன்கிழமைகளில்) ரூ. 5000/- காலை 5-30 மணிக்கு. 6 நபர்கள் அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 7 பெரிய லட்டு கள், 7 வடைகள் 5 அப்பங்கள், 5 தோசை கள், புளியோதரை, பொங்கல், சர்க்கரைப் பொங்கல், பாயசம், (ஒவ்வொன்றும் 1/32 சோலா அளவு. |
| 4) திருப்பாவாடை | (வியாழக்கிழமைகளில்) ரூ. 5000/- காலை 5-30 மணிக்கு. 6 நபர்கள் அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 7 பெரிய லட் டுகள், 7 வடைகள் 5 அப்பங்கள், 5 தோசைகள், 5 தேன் துளைகள், புளி யோதரை, பாயசம், (ஒவ்வொன்றும் 1/32 சோலா அளவு.) |
| 5) அபிஷேகம் | (வெள்ளிக்கிழமைகளில்) காலை 3-30 மணிக்கு (அ) பூராபிஷேகம் : ரூ. 750/- (ஒவ்வொ ருவருக்கும்) அன்பளிப்பு: 2 சிறிய லட்டு, 2 வடைகள். (ஆ) புனுகுப்பாத்திரம் : ரூ. 300/- (ஒவ் வொருவருக்கும்) அன்பளிப்பு: 1 சிறிய லட்டு, 1 வடை. (இ) கஸ்தூரிக்கிண்ணம் : ரூ. 150/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 1 சிறிய லட்டு, 1 வடை. அன்பளிப்பு : |

குறிப்பு :

(1) வரிசை 1 முதல் 4 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே பதிவு செய்து கொள்ளலாம்.

(2) கிடைத்திடும் சீட்டுகளைப் பொறுத்து, ஒரு வருடத்திற்கு முன்பேயே அபிஷேகத்திற்கு முன்பதிவு ஏற்றுக்கொள்ளப்படும்.

லட்டுப்படி

ஆர்ஜிதம் பெரிய லட்டு படி - ரூ. 2500/-
சிறிய லட்டு படி - ரூ. 750/-

சீட்டு வாங்கிய பக்தரைச் சார்ந்த மொத்தம் ஐந்து நபர்களுக்கு ஏழுமலையான் தரிசன வசதி செய்து தரப்படும். தரிசனத்திற்குப் பிறகு 30 லட்டுகள் வழங்கப்படும்.

# ஆளவந்தார் வார்த்தைகள்

டாக்டர் எம்.எஸ். வெங்கடாச்சாரி - சென்னை.

யத்பதாம் போருஹத்யாந
 வித்வஸ்தா சேஷ கல்மஷ: ।
வஸ்துதா முபயாதோऽஹம்
 யாமுநேயம் நமாமி தம் ॥

திருமாலடியார் அறியவேண்டிய மும்மை உண்மைக் கொள்கைகளையும் (தத்வத்ரயம்) மும்மறைப் பொருள்களையும் (ரகசியத்ரயம்) ஐம்பொருள்களையும் (அர்த்த பஞ்சகம்) பிற இன்றியமையாத வைணவ சமயக் கொள்கைகளையும் தரும் நூல் ஒன்றினைப் பின்பழகிய பெருமாள் சீயர் வைணவ உலகுக்குத் தந்துள்ளார். அந்நூல் "வார்த்தாமாலை" என்னும் திருப்பெயருடன் மணிப்பிரவாள நடையில் அமைந்துள்ளது. அந்நூலில் நானூற்றைம்பத்தாறு செய்தித்தொகுப்புகள் "வார்த்தைகள்" என்னும் பெயருடன் இடம் பெற்றுள்ளன. அந்நூலின் முதல் வார்த்தை கீழ்க்கண்டவாறு தொடங்குகிறது.

> "ஒருவனுக்கு அறிய வேண்டுவது, ஸ்வரூப புருஷார்த்த உபாயங்கள். இதுதான் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் ஸம்ஸாரிகளுக்கும் வேணும்.........."

இறுதி வார்த்தை கீழ்க்கண்டவாறு நிறைவுறுகிறது.

> "..............சரம தசாஜ்ஞாநாநுஷ்டாநக்ரம சாதுர்யமுள்ளது பரமாசார்யரான இவர்க்கேயிறே"

இவ்விறுதி வார்த்தையில் "பரமாசார்யர்" என்று குறிப்பிடப் பெறும் ஆளவந்தாரின் வார்த்தைகளை இவ்வைணவ உலகுக்கு அறிமுகப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## ஆளவந்தார் பற்றிய வார்த்தைகள்

இந்நூலில் நூற்றுக்கணக்கான பெரியோர்களின் வார்த்தைகள் இடம் பெற்றுள்ளன. அவைகளுள் கீழ்க்கண்ட வரிசை எண்களுள்ள பதினெட்டு வார்த்தைகள் ஆளவந்தாருடன் தொடர்புடையவை:-

36, 84, 136, 173, 184, 186, 187, 188, 189, 208, 209, 273, 303, 378, 394, 403, 441, 456.

கீழ்க்கண்ட ஒன்பது வார்த்தைகள் ஆளவந்தார் பற்றிய செய்திகளைத் தருகின்றன.

| வார்த்தை எண். | செய்திச் சுருக்கம் |
|---|---|
| 173. | திருமலையாண்டான் பக்கலில் இராமாநுசர் திருவாய்மொழிப் பொருள் கேட்டார். 'அறியாக் காலத்துள்ளே' என்று தொடங்கும் திருவாய்மொழி உபகாரஸ்ம்ருதி என்று இராமாநுசர் கூறினார். ஆளவந்தாரும் அவ்வாறு அருளிச் செய்யத் தாம் கேட்டதாகத் திருக்கோட்டியூர் நம்பி திருமாலையாண்டானிடம் கூறினார். |
| 189. | மேற்கூறிய செய்தியே இடம் பெற்றுள்ளது (திருக்கோட்டியூர் நம்பி திருமாலையாண்டான் உரையாடலாக இல்லை.) |
| 184. | இராமாநுசருக்கும் ஆளவந்தாருக்கும் உள்ள வேறுபாடு பற்றிக் கூரத்தாழ்வான் கூற்று இவ்வார்த்தையில் உள்ளது. 'நண்பனைக் கைவிட மாட்டேன்' என்னும் இராமபிரான் போன்றவர் ஆளவந்தார். இவ்வுலகில் குற்றம் செய்யாதவன் ஒருவருமில்லை என்னும் சீதைப்பிராட்டி போன்றவர் இராமாநுசர். |
| 186. | உடையவர் சீடர்களுடன் எழுந்தருளும்பொழுது பெரிய நம்பிகள் அவர்களை வணங்கினார்; உடனிருந்தோர் சீடரை வணங்கக் காரணம் கேட்டனர். பெரிய நம்பிகள் உடையவரைத் தம் ஆசாரியரான ஆளவந்தாராகக் கருதி வணங்கினேன் என்றார். தம் ஆசாரியரான ஆளவந்தாருக்குப் பின் ஆசார்யத்வ பூர்த்தி உடையவர் இராமாநுசரே யென்றும் கூறினார். |
| 187. | உடையவர் ஆளவந்தாரின் வார்த்தைச் சிறப்பினை உரைத்தார். |
| 209. | ஆளவந்தார் 'அநந்தபுர நகரானை' வணங்கத் திருவனந்தபுரம் சென்றார். ஆளவந்தாரின் சீடர் தெய்வ |

பார்வை நூல் : 'வார்த்தாமாலை' ஸ்ரீ எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், புத்தூர்.

வாரியாண்டான் ஆள வந்தார் பிரிவு தாங்காது நோயுற்றார். அடியவர் அவரைத் திருவனந்தபுரம் அழைத்துச் சென்றனர். ஆளவந்தார் திருவனந்தபுரத்துக்கு அருகில் திரும்பி வரும் வழியில் தம் சீடரைச் சந்தித்தார். ஆளவந்தார் தம் சீடரைத் திருவனந்தபுரம் சென்று பெருமாளைத் திருவடி தொழும்படிக் கூறினார்; சீடர், "என்னுடைய திருவனந்தபுரம் எதிரே வந்தது' என்று கூறி ஆளவந்தாருடன் திருவரங்கம் திரும்பினார்.

273. இராமாநுசர், தம் மறைவுக்குப் பின் தம் சீடர்கள் தற்கொலை செய்து கொள்ளக்கூடாது என்று ஆளவந்தார் திருவடிகளின் மேல் ஆணையிட்டார்.

378. திருவரங்கம் சந்திரபுஷ்கரிணிக் கரையில் திருப்புன்னை மரத்தடியில் பெரிய நம்பிகளும் திருக்கோட்டியூர் நம்பிகளும் திருமாலையாண்டானும் ஆளவந்தாரை மனத்தில் தியானித்து மகிழ்ந்திருக்கையில் திருவரங்கச் செல்வனார் பலி சாதிக்க எழுந்தருள, ஆசாரிய தியானத்துக்குத் தடை வருகிறதே என்று வருந்தினர்.

403. குருகை காவலப்பன் யோக சாஸ்திர உபதேசம் செய்ய எண்ணி, ஆளவந்தாருக்கு நியமனம் ஸாதித்துக் குறித்துத்தந்த நாளன்று திருவநந்தபுரம் திருக்கோயிலில் ஆளவந்தார் இருந்தார். ஒரு புஷ்பக விமானம் பெற்றிலோமே என்று ஆளவந்தார் வருந்தினார். மணக்கால நம்பியைப்போல் பெருமாளும் "சேஷத்வ ஜ்ஞாநமே அமையும்" என்றார். வார்த்தை எண் 209இலும் இச் செய்தி உள்ளது.

## ஆளவந்தார் உபதேச வார்த்தைகள்

இனி ஆளவந்தார் இவ்வுலகினருக்கு அருளிச்செய்துள்ள வார்த்தைகளில் இடம்பெறும் சீரிய செய்திகள் ஒவ்வொன்றுகக் காணப்பெறும்.

### (அ) திருமந்திரம்

ஆளவந்தார் திருமந்திரம் பற்றிக் கீழ்க்கண்டவாறு அருளிச் செய்துள்ளார்:

"திருமந்திரம் மூன்று பதத்தாலும் - அபிஜந வித்யா வ்ருத்தங்களை வெளியிடுகிறது."

(எண் 36)

விளக்கம்: திருமந்திரம் மூன்று பதங்களை உடையது. முதல் பதமான பிரணவம் (ஓம்) மகார வாச்யனான ஜீவான்மா அகார வாச்யனான பரமான்மாவுக்கே உடைமைப் பொருளாக அமைவதைத் தெரிவிக்கிறது. இதனால் பிரணவம், ஜீவான்மாவுக்கு இறைவனுடன் உள்ள உயர்குலத் தொடர்பினை (அபிஜந) வெளியிடுகிறது.

திருமந்திரத்தின் இரண்டாவது பதம் 'நம' ஆகும். இறைவனடியில தொண்டு செய்தலாகிய பேறுக்கு, 'எனதென்பதென்? யானென்பதென்? என்ற எண்ணத்துடன் கைம்முதலில்லாமையை அநுஸந்தித்து அவன் திருவடிகளைச் சரணடைவதைத் தவிர வேறு வழியில்லை என்னும் பிரபத்தி வித்யா நிஷ்டையை அச்சொல் வெளியிடுகிறது.

திருமந்திரத்தின் மூன்றுவது பதம் 'நாராயணுய' ஆகும். அச்சொல் பகவத் பாகவத கைங்கர்யமாகிற நல்லொழுக்கத்தை (வ்ருத்தம்) வெளியிடுகிறது.

இதனால் திருமந்திரத்தில் இடம் பெறும் மூன்று பதங்களும் முறையே அபிஜந (உயர் குடிப்பிறப்பு), வித்யா (பிரபத்தி நிஷ்டா வித்யா) வ்ருத்தம் (கைங்கர்யமாகிற நல்லொழுக்கம்) ஆகியவை பற்றிக் கூறுகின்றன எனத் தெரிகிறது.

### (ஆ) துவய மந்திரம்

வைணவர் எப்பொழுதும் நினைத்துய்ய உதவும் துவய மந்திரம் பற்றிய ஆளவந்தார் கருத்து கீழ்க்கண்டவாறு அமைகிறது:

"அதநனுக்கு மஹாநிதிபோலே"

(எண் 136)

விளக்கம்: பெருஞ்செல்வம் தரித்திரனுக்குப் பெருமகிழ்வையும் நலன்களையும் அளிக்கும்; அதே போன்று துவய மந்திரம் திருமாலடியார்க்குப் பெருமகிழ்வையும் நலன்களையும் அளிக்கும் என்பது ஆளவந்தார் திருவுள்ளக் கருத்தாகிறது.

### (இ) உபாயம்

திருக்கோட்டியூர் நம்பிகள் பெரிய முதலியாரை (ஆளவந்தாரை) நோக்கிக் கீழ்க்கண்டவாறு வினாவினார்:

**"உபாயாம்சத்தில் தஞ்சமாக நினைத்திருப்பதென்?"**

ஆளவந்தார் கீழ்க்கண்ட பதிலை அளித்தார்:

"அபிரூபையான ஸ்த்ரீ அழகை மட்டிக்க மட்டிக்க அபிரூபனாய் ஐசவர்யவானுமான புருஷன் அந்தரங்கமாக ஆழங்காற்படுமா போலே அஜ்ஞனான சேதனன் அழுக்கறுக்க அழுக்கறுக்க அவ்வீசவரன் திருவுள்ளம் அதயாஸ்ரந்மாய்ப் போருங்காணும்."

(எண். 84)

விளக்கம்: அழகிய மனைவி தன் அழகை அலங்காரம் முதலானவற்றாலே மிகுதி செய்யச் செய்ய அழகுடையவனும் செல்வம் மிக்கவனுமான கணவன் அவளிடம் மிகுந்த ஈடுபாடு கொள்வான். மனைவி தன் கணவன் தன்னிடம் ஈடுபாடு கொள்வதற்கு வேறு வழிகளில் இறங்க வேண்டாம். அதேபோன்று தன் நிலையையும் (ஸ்வஸ்ரூபம்) இறைவனின் நிலையையும் (பரஸ்வரூபம்) இரண்டு நிலைகளுக்குமிடையே உள்ள தொடர்பையும் அறியாமல் இருந்த ஜீவன் (அஜ்ஞாநான சேதனன்) இறைவனைத் தன் நாயகனாக (உடையானாக) ஏற்று அந்நாயகனுக்கு இனிமை விளைவிக்கத்தக்க நிலையில் தன் அழுக்கை (அஜ்ஞானத்தை) அறுக்க அறுக்க இறைவன் திருவுள்ளம் சேதனன்பால் மிகவும் ஈடுபடும். ஆகையால் இறைவன் தன்னைப் பற்றியருள் செய்ய வேறு ஒன்றையும் சேதனன் செய்ய வேண்டாம். இதனால் ஸ்வரூப ஜ்ஞாநத்தின் பெருமை பேசப்பெற்றது.

## (ஈ) ஆத்ம ஜ்ஞானத்தின் உயர்நிலை

ஆளவந்தாரின் சீடர்களுள் இருவர ஒருவரையொருவர் பிரியாது மிகுந்த நட்புடையவராக விளங்கினர். ஒரு நாள் ஆற்றுக்கு இருவரும் சென்றனர்; ஒருவர் மட்டும் தனியே மீண்டு வந்தார். அப்பொழுது ஆளவந்தார் தனியே திரும்பிவந்தவரைப் பார்த்துக் கீழ்க்கண்டவாறு அருளிச்செய்தார்:

"அனறிலினுடைய அவஸ்தை பிறந்தபோதுகாண் ஆத்மஜ்ஞானம் பிறந்ததாவது"

(எண். 208)

விளக்கம்: அனறிற பறவைகள் ஒன்றையொன்று விட்டுப் பிரியா; பிரியின் உயிர் தரியா. அடியவர்களும் உடன்வாழும் அடியவர்களிடம் அன்றில் பறவைகள் போல அன்புடன் நடந்துகொள்ள வேண்டும். அந்நிலையில பழகும்பொழுதுதான் ஆத்ம ஜ்ஞானத்தின உயர்நிலையை, அடியவர் கைவரப்பெற்றார் என்று அறியலாம்.

அடியவர்கள் ஒருவரோடொருவர் ஒற்றுமையாக வாழ்தலின் இன்றியமையாமையையும் ஆளவந்தாரின் சமுதாயப் பார்வையும் இதன் மூலம் நன்கு தெரிகிறது.

## (உ) இறைபேற்றுக்குத் தடை (விரோதி ஸ்வரூபம்)

ஆளவந்தார், பெருமாள் திருவடிதொழத் திருக்கோயில் சென்றார். அங்குப் பெண்ணொருத்தி கண்ணில் கண்ணீர் விட்டுக் கொண்டு புடவையைக் கழுத்தில் போர்த்திக் கொண்டு திருமாலை வலம் வந்து கொண்டிருப்பதைக் கண்டார். உடனே கோயிலினுள் செல்லாது, 'பெருமாளை வேறு பயன் வேண்டி வலம் வரும் பெண் வெளியில் சென்றாளோ?' என்று கேட்டார். அங்கிருந்தோர் ஆளவந்தார் அவ்வாறு வினாவிய காரணம் அறிய விரும்பினர். அவர்களுக்கு விடையாகக் கீழ்க்கண்டவாறு அருளிச்செய்தார்.

"பெருமாள் ஸந்நிதியேயாகிலும் ப்ரயோஜநாந்தர பரரோட்டை சேர்த்திக்கு அதிகாரி விரோதம் பிறந்து பல விரோதமும் பிறக்குங்காணு"

(எண் 394)

விளக்கம்:

பெருமாள திருக்கோயிலானும வேறு பயன் கருதித் திருமாலை வழிபடுபவருடன், வேறு பயன கருதாது, 'நின்னருளே புரிந்திருந்தேன்! இனியென் திருக்குறிப்பே' என்று திருமாலை வழிபடுபவர் சேர்தல தகாது. ஏனெனில் இருவரும (இருவகை அதிகாரிகளும்) ஒருவருக்கொருவர் முரண்பட்ட கொள்கையுடையவர் ஆவர். அதுமட்டுமின்றி அவரவர் விரும்பும் பலன்களும் முரண்பட்டவையாக அமைந்துவிடும். வேறு பயன் கருதித் திருமாலை வழிபடுதல் "விரோதி ஸ்வரூபம்" என்பது ஆளவந்தார் திருவுள்ளம் என்று புலனாகிறது.

## (ஊ) ஊனினைச் சுருக்கி உயிரொளி பெருக்குதல்

பெரிய முதலியார் என்னும் ஆளவந்தார் தம் சீடரான அம்மங்கி என்னும் பெயருடைய திருமாலடியாருக்கு மிகவும் உயர்ந்ததான 'பகவத் விஷயத்தை' உபதேசம் செய்தார். வயதில் மிகவும் இளையவராக இருந்த அம்மங்கியாருக்குத் தாம் உபதேசம் செய்தமை ஒருவேளை தீங்கில் முடியுமோ என்று ஆளவந்தார் கவலை கொண்டார். தம் கவலையைக் கீழ்க்கண்டவாறு அம்மங்கியிடம் வெளிப்படுத்தினார்:

"உன்னுடைய பால்யத்தைப் பாராதே பகவத் விஷயஞ்சொன்னோம். விபூதியென்படக் கடவதென்றறிகிலோம். உடம்பையிட்டு வெருட்டாதே! உயிரை மருட்டுக் கொண்டு போரு" (எண் 303)

விளக்கம் :

"உன் இளம் வயதைக் கருத்தில் கொள்ளாது பகவத் விஷயத்தை உனக்குச் சொன்னேன். உன்னிடம் உபதேசம் கேட்க வரும் பெண்களுக்கு உன் உடலழகினால் பாதிப்பு ஏற்படா வண்ணம் ஊனினைச் சுருக்கி உயிரொளி பெருக்கி அனைத்து ஆத்மாக்களும் கடைத்தேறும் படி நடப்பாயாக" என்பது ஆளவந்தார் உபதேசமாகும். இவ்விடத்தில் விபூதியென்னும் சொல் இறைவனின் விபூதியில் ஒன்றான பெண்ணைக் கூறுகிறது.

இதனால் ஆளவந்தார் சமுதாயத்தின்பால் கொண்டிருந்த அக்கறை நன்கு புலப்படுகிறது. இதே செய்தி வேறொரு வார்த்தையிலும் (எண் 441) கீழ்க்கண்டவாறு இடம் பெற்றுள்ளது:

"பிரஜைகள் நடமாடுகிற வாசலிலே பாம்பைப் பிடித்து விடுவாரைப் போலே இவருக்கு நான் ஹிதஞ் சொன்னேன்; இதென்னாய் விளைகிறதோ என்று, உடலைக்காட்டி வெருட்டாதே உயிரைக் காட்டி அகப்படுத்திக்கொடு போகப்பார்'

என்றருளிச் செய்தார் அம்மங்கிக்கு ஆளவந்தார். (எண் 441)

இச்செய்தியில் இடம் பெறும் உவமை நயம் போற்றத்தக்கதாக விளங்குகிறது. உயிர் என்னும் சொல் ஆத்ம ஸ்வரூபம் என்னும் பொருளில் வந்துள்ளது எனலாம்.

## (எ.) நம்மாழ்வார்

நம்மாழ்வாருக்கு ''மாதா பிதா' என்று தொடங்கும் தனியன் அருளிச்செய்த ஆளவந்தார், நம்மாழ்வாரைத் திருமாலின் அவதாரமாகவே கருதி வழிபட்டு வந்தார என்பதைக் கீழ்க்கண்ட வார்த்தை உறுதி செய்கிறது:

"எம்பெருமான் தானே
நம்மாழ்வாராய் வந்தார்"
(எண் 188)

விளக்கம் :

ஆளவந்தாருக்குப்பின் தோன்றிய ஆசாரியர்கள், 'நம்மாழ்வார் ஒரு நித்ய ஸம்ஸாரி; எம்பெருமான் அவருக்கு மயர்வற மதிநலம் அருளி அவரை விண்ணுளாரிலும் சீரியராக்கினான்' என்னும் கருத்தையும் கொண்டிருந்தனர்.

குருபரம்பரை நூல்களில் ஆழ்வார்களை எம்பெருமான் புதிய பத்து அவதாரங்களாகப் போற்றும் கருத்தும் உள்ளது. நம்மாழ்வாரை இராமனாகவும் இராமாநுசரை இலக்குவனாகவும் போற்றும் மரபுமுண்டு. "உறங்கும் பெருமாளே உலாவும் பெருமாளாக வந்தார்" என்று ஆசாரியனைப் போற்றும் சரம பருவநிலைக் கொள்கைப்படி, நம்மாழ்வாரை இறைவன் அவதாரமாக ஆளவந்தார் கொண்டார் என்று கொள்ளுதல் மிகவும் பொருத்தமுடையது எனலாம்.

## ஏ. இராமாநுசர்

காஞ்சி மாநகரில் இராமாநுசர் யாதவப்பிரகாசரிடம் கல்வி பயின்று வந்தார். காஞ்சி மாநகர் வந்த ஆளவந்தார் இராமாநுசரை அருளோடு பார்த்தார். முன்னோர்கள் மூலம் "பவிஷ்யத் ஆசாரியர்" பற்றி அறிந்த ஆளவந்தார் இராமாநுசரே "பவிஷ்யத் ஆசாரியர்" என்று தெளிந்தார். இராமாநுசரைப் பார்த்து,

"இம்மஹாநுபாவன் இத்தர்சனத்தில்
புகுந்தானாகிலோ" (எண் 441)

என்றார்.

விளக்கம் :

இராமாநுசர் விசிட்டாத்வைத சமயத்தை வளர்க்கும் பணியில் விரைந்து ஈடுபடவேண்டும் என்னும் தம் விருப்பத்தை ஆளவந்தார் தெரிவிக்கும் பகுதியாக இதனைக் கூறலாம்.

## ஐ. ஆளவந்தாரின் இறுதி உபதேசம்

ஆளவந்தார் திருமேனிப் பாங்கில்லாது மிகவும் தளர்ந்த நிலையில் எழுந்தருளியிருந்த பொழுது, திருவரங்கப்பெருமாள் அரையரை (ஆளவந்தார் திருக்குமாரர்) முன்னிட்டுப் பெரிய நம்பிகளும் திருக்கோட்டியூர் நம்பிகளும் வணங்கித் தங்களுக்குத் தஞ்சமாக உபதேச மொழிகளையருள வேண்டினர். அவ்வமயம் ஆளவந்தார் அருளிய உபதேச வார்த்தை மிகவும் பெரியது. அவ்வார்த்தையில் இடம்பெறும் முக்கியமான செய்திகள் கீழே தரப்பெறுகின்றன.

1) கோயிலாழ்வாரே உங்களுக்கு உயிர்நிலை; உங்களுக்குத் தஞ்சம் என்று புத்தி பண்ணிப் போருங்கோள்.

2) பெரிய பெருமாள் திருவடிக்கீழே வீணையுங்கையுமாய் ஸேவித்திருக்கிற திருப்பணாழ்வார் விக்ரஹத்தைப் பாதாதி கேசாந்தமாக ஸேவித்துக் கொண்டு போருங்கோள்.

3) ஒருவன் பிரபன்னனால் பகவத்திநமான ஆத்ம யாத்ரையிலும் சரமாதிநமான தேஹ யாத்ரையிலும் அநவயமுண்டெனறிருந்தானாகில் ஆத்ம ஸமர்ப்பணமும் குலைந்து நாஸ்திகனாய் விடும். ஆகையாலே உபய யாத்ரையிலும் அந்வயமில்லை.

4) நார்ராயணன் இயற்கையில் ஔதார்ய குணமுடையவன்.

5) பேற்றுக்குத்வரிக்கையும் ஸ்வரூபஹாநி.

6) எம்பெருமான் ரக்ஷ்யனென்றிருக்கையும் ஸ்வரூப ஹாநி.

7) எம்பெருமான்தாள் தொழுவாரெப்பொழுதும் என் மனத்தேயிருக்கின்றூர் என்பது உபாயமும் உபேயமும் என்று புத்தியில் கொள்ளவேண்டும்.

8) திருமந்த்ரார்த்தம் போக மண்டபம்.

9) சரம ச்லோகார்த்தம் புஷ்ப மண்டபம்.

10) துவயார்த்தம் தியாக மண்டபம்.

(எண் 456)

மேற்கூறிய உபதேச மொழிகளைக் கீழ்க்கண்ட விளக்கங்கள் மூலம் நன்கு புரிந்துகொள்ளலாம்.

கோயிலாழ்வார் என்பது திருவரங்கப்பெருமாள் எழுந்தருளியிருக்கும் கருவறை. தஞ்சம் எனினும் புகல் எனினும் ஒக்கும். பாதாதிகேசாந்தம் திருவடி முதல் திருவடி வரை.

பிரபன்னன் - சரணடைந்தோன், பற்றியவன்

அதீனம் - உரிமை

ஆத்மயாத்ரை - ஆன்மாவின் செலவு

தேஹயாத்ரை-இவ்வுலக வாழ்வு

அந்வயம் - ஈடுபடுதல்

உபய - இரண்டு

ஔதார்யம்-வண்மை, கொடைத்தன்மை

த்வரிக்கை - விரைதல்

ரக்ஷ்யன் - காக்கப்படுமவன்

ஹாநி - அழிவு

உபாயம் - வழி, நெறி

உபேயம் - உபாயத்தினால் அடையும் பேறு.

போக மண்டபம் - திருவரங்கம் திருக்கோயில்

புஷ்ப மண்டபம் - திருமலையப்பன் திருக்கோயில்

தியாக மண்டபம் - காஞ்சி வரதராசர் திருக்கோயில்.

இறுதியாக ஆளவந்தார் திருவரங்கம் திருத்தலத்தார்களைப் பார்த்து,

"பெரிய பெருமாள் திருவாராதனம் திருமந்த்ர புஷ்பம் காலா காலத்திலே நடத்திக் கொண்டு போருங்கோள்" ஆசார்யர்கள், முதலிகள், தேசாந்த்ரிகள் முதலானோரை அரவணைத்துக் கொண்டு போருங்கோள் என்றும் அருளிச்செய்தார். அந்நாளிலேயே (வைகாசி மாதம் திருவோணம்) திருநாடலங்கரித்தார்.

இதனால் திருவரங்கம் திருக்கோயில்மேலும் வைணவ அடியார்மேலும் ஆளவந்தார் கொண்டிருந்த அக்கறை நன்கு புலனாகிறது. வார்த்தாமாலையிலும் ஆறுயிரப்படி குரு பரம்பரையிலும் ஆளவந்தார் திருநாடலங்கரித்த செய்தியினைப் பயிலும் பொழுது கருங்கல் மனமும் கரையும். உலகுக்கெல்லாம் ஒருயிராக ஆளவந்தார் திகழ்ந்தார் என்னும்படி அவர் மறைவு அடியார்களைப் பாதித்துள்ளமை நன்கு புலப்படும். பேறுபெற்ற பெரியோர் அவர் சீடராக அவர் காலத்தில் வாழ்ந்தனர்; அவரருளை நேரே பெற்று மகிழ்ந்தனர் எனில் மிகையாகாது.

## முடிவுரை :

தமிழ்நாட்டில் அரசியல் சூழ்நிலை, வைணவ சமயத்துக்கு எதிராக இருந்தபொழுது இராமாநுசர் மேல்நாட்டிற்குச் (கருநாடக மாநிலம்) சென்றனர். அவருடைய பேருரைகளை (உபந்யாஸங்களை) அனைவரும் கேட்டு மகிழ்ந்தனர். அவர்களைப் பார்த்து, "என பரமாசார்யரான ஆளவந்தாருடைய வார்த்தைகளை அவருடைய சீடர்கள் மூலம் கேட்டுச் சொன்னேன். அவரைக் கண்ணாலே கண்டு சிறிது காலம் உடன் இருந்தேனாகில் பரம பதத்துக்கு இங்கிருந்து படிகட்டியிருப்பேன்" என்னும் பொருள்படும் கீழ்க்கண்ட வார்த்தையை அருளிச்செய்தார்.

**"என் பரமாசார்யர் வார்த்தையைக் கேட்டுச் சொன்னேனித்தனை; அவரைக் கண்ணாலே கண்டேனாகில் பரமபதத்தளவும் ஸோபாநமாகக் கட்டேனோ?"**

**(ஸோபாநம்-படி) (எண் 187)**

இந்த வார்த்தையில் (187) இராமாநுசர் தம் பரமாசார்யர் வார்த்தைச் சிறப்பினைத் தம் திருவாக்கினால் உலகறியச் செய்துள்ளார். இராமாநுசர் தரிசனம் (எம்பெருமானார் தரிசனம்) ஆளவந்தார் திருவாக்கினைப் பின்பற்றி அமைந்தது என்பதற்கும் ஆளவந்தார் வார்த்தைச் சிறப்பிற்கும் வேறு சான்றுகள் வேண்டுமோ?

ஆளவந்தார் திருவடிகளே சரணம்.



# யமுனைத் துறைவர் மாண்பு

திரு. வானமாமலை வித்வான் J. சடகோபாசாரியர் - நான்குனேரி.

यत्पादाम्बोरुहध्यान विध्वस्ता शेषकल्मषः ।
वस्तुतामुपयातोऽहं यामुनेयं नमामि तम् ।।

நிகழும் தாது வருடத்தில் ஆளவந்தாருக்கு ஆயிரம் ஆண்டு பூர்த்தியாகிறது. இதை வேங்கடவன் வைபகிரி மூலம், கொண்டாடுகிறோம். ஸ்ரீவைஷ்ணவ ஆசிரிய குருபரம்பரை பெரிய பெருமாள் முதல் பெரிய கோயில் மணவாள மாமுனிவரை தானே சிஷ்யனுமாய் ஆசாரியனுமாய் நின்று திகழ்கிறது. நான்கு தத்துவங்களில் அடங்குகிறது. 1. ஸ்ரீரங்க தத்துவம் 2. ஸ்ரீசடகோப தத்துவம் 3. பகவத் ராமானுஜ தத்துவம் 4. ஸ்ரீமத் வரவரமுநி தத்துவம்.

## ஸ்ரீரங்க தத்துவம்

முதலாவதான ஸ்ரீரங்க தத்துவத்தில் கோயில், திருமலை முதலான நூற்றெட்டு திவ்ய தேச எம்பெருமான்கள் சேவை சாதிக்கிறார்கள். அணியார் பொழில் சூழ் அரங்கநகரப்பனே நூற்றெட்டு திருமேனிகளுடன் சேவை சாதித்துக்கொண்டிருக்கிறார். अङ्गनामङ्गनां अन्तरे माधवः என்று ஒரே கண்ணன் பதினாறுயிரம் கோபியர்களுடன் பலதிருமேனிகளுடன் காட்சியளித்தற்குச் சான்றாகும் இது. நம்பெருமாள் வலது பக்கம் பராங்குச நாயகியையும் இடது பக்கம் பரகால நாயகியையும் பல திருமேனிகளுடன் திகழச் செய்து நூற்றெட்டு திவ்ய தேசங்களில் விளங்குகிறார்.

இதை ஸ்வாமி நம்மாழ்வார் திருவாய்மொழி (2-1-5)ல்

“ஊழி தோறூழி உலகுக்கு நீர்கொண்டு
தோழியரும் யாமும் போல்”

என்று பாடியுள்ளார். இந்தப் பாடலின் அடுத்த வரியில்,

“மயால் மது ராதுவாதிசனைப்
போல, பராங்குச
பரகால யதிவராதிகளும் நித்யர்கள்”

என்று பொன்னெழுத்தில் பதிப்பித்துள்ளார்கள்.

“மந்திபாய் வடவேங்கடமாமலை
வானவர்கள்
சந்தி செய்ய நின்றான்
அரங்கத் தரவினணையான்”

என்ற அமலனாதிபிரான் பாடல் வடவேங்கடவனே தென் திருவரங்கத்தில் பள்ளிகொண்டிருக்கிறார் என்பதை நன்கு புலப்படுத்தும்.

## ஸ்ரீசடகோப தத்துவம்

ஸ்வாமி நம்மாழ்வாரே மற்ற ஆழ்வார்கள், ஆண்டாள் திருமேனிகளில் அநுப்ரவேசம் பண்ணி அருளிச்செயல்களைப் பாடியுள்ளார். இதற்குச் சான்று ஸ்ரீமந் நாதமுனிக்கு ஸ்வாமி நம்மாழ்வார் நாலாயிரம் பாடலையும் (அருளிச் செயல் முழுவதையும்) உபதேசம் செய்தது. ஸ்ரீசடகோப தத்துவத்தில் பன்னிரண்டு ஆழ்வார்கள் அடங்கியிருக்கிறார்கள்.

## ஸ்ரீ பகவத் ராமாநுஜ தத்துவம்

ஸ்வாமி எம்பெருமானாரின் அவயவ விசேஷங்களே ஸ்ரீமந் நாதமுனி முதல் திருவாய்மொழிப்பிள்ளை வரை அமைந்த ஓராண்வழி ஆசாரியர்கள். இதை

मस्तकं श्रीशठारातिं नाथाख्यं मुखमण्डलम् ।
नेत्रयुग्मं सरोजाख्यं कपोलं राघवं तथा ।।
वक्षःस्थलं यामुनार्यं कण्ठं श्रीपूर्णदेशिकं ।

என்று ஆரம்பித்து,

[illegible] पादपङ्कजम् ।
रम्यां श्रीशैलनाथाख्यं पादुकाम् वरयोगिनम् ।।

என்ற ச்லோகங்கள் அறிவிக்கின்றன.

ஸ்வாமி எம்பெருமானாரின் திருமார்பாகத் திகழும் ஆளவந்தாரை நம்பெருமாள் எப்படி எம்பெருமானார் தரிசனத்தை வளர்க்கச் செய்தார் என்பதை இந்தச் சிறிய கட்டுரையில் சுருக்கமாக எழுதுகிறேன்.

## ஸ்ரீமத் வரவரமுநி தத்துவம்

ஸ்ரீமத் வரவரமுநி தத்துவத்தில் எம்பெருமானாரின் மறு அவதாரமான மணவாளமாமுனி அஷ்டதிக்கஜ ஆசாரியர்களுடன் சேவை சாதித்துக்கொண்டிருக்கிறார்.

இனி மூன்றாவது தத்துவத்தில் அமைந்த ஆளவந்தார் வைபவத்தில் சில திவலைகளை அநுபவிப்போம்.

பெரிய பெருமாள், பெரிய பிராட்டியார், சேனை முதல்வர் என்ற மூவரும் பரமபதத்தில் அயர்வறுமமரர்களுடன் இருப்பவர்கள். ஆதிகுருவாய் அவனியில் அவதரித்தார் ஸ்வாமி நம்மாழ்வார். அதனால்தான் நாம் அனைவரும், “தேசிகனைப் பராங்குசனைத் திகழ்வகுளத் தாரானை” ‘ஆழ்வார் திருவடிகளே சரணம்’ என்று துதிக்கிறோம்.

காலவெள்ளத்தில் அருளிச்செயல் முழுவதும், "ஆற்றில கரைத்த புளியாக" மறைந்த பொழுது, வீரநாராயண புரத்தில் அவதரித்த ஸ்ரீமந்நாத முனி, திருக்குடந்தையில் ஆராவமுதன் சந்நிதியில், "ஆராவமுதே" என்ற அமிழ்தினுமாற்ற இனிதான தமிழ்மறைப பாடலைக் கண்டுபிடித்து, திருககுருகூருக்கு எழுந்தருளி, ஸ்வாமி நம்மாழ்வாரிடம் சந்தமிகுதமிழ் மறையான நாலாயிரம் பாடல்களையும் உபதேசமாகப் பெற்ருர். இந்த ஸ்ரீமந்நாதமுனியின் திருப்பேரனார் வீரநாராயண புரத்தில் (காட்டுமன்னார் கோவிலில்) ஆடிமாதம் உத்திராட நன்னாளில் அவதரித்தார். அரசன் திருடன், அரசனின் தாயார் மலடி, மன்னனின் மனைவி கற்புக்கரசியில்லை என்று சாஸ்திரப்பிரமாணங்காட்டி ஆக்கியாழ்வானை அரசவையில் வென்று பாதி ராச்சியத்தையும் பெற்று,

"मीमांसाशास्त्रयुग्म श्रमविमलमनाः मृग्यतां
माद्दशोऽन्यः ।"

என்றும்,

"न वयं केवलतन्त्रपारगाः ।
अपि तु प्रतिवादिवारणप्रकटाटोपविपाटन क्षमाः ।।"

என்றும் அரசவையில் ஆஸ்தான வித்வான் பதவியில் வீற்றிருந்தார்.

இதன் பொருள், பூர்வமீமாம்ஸா, உத்திர மீமாம்ஸா சாஸ்த்ர நிபுணர், புலமை, சாஸ்திர அறிவில் கரை காண்பதுடன் எதிரிவித்வான்களான யானைகளின் திமிரை அடக்கும் சீரிய சிங்கமாகத் திகழ்பவர் என்று தன் பெருமையைத் தானே அறிவிக்கிருர்.

ஸ்ரீமந்நாதமுனியின் திருப்பேரனார் இப்படி அரசபோகத்தில் மூழ்கியிருக்கும்பொழுது, ஸ்ரீமந்நாதமுனியிடம் அருளிச்செயல் உபதேசம் பெற்ற உய்யக்கொண்டார், தனது சிஷ்யரான மணக்கால்நம்பியை யமுனைத்துறைவரின் திருமாளிகைக்கு தூதுவிளைக் கீரையைச் சமர்பபிக்க அனுப்புகிருர்.

மணக்கால்நம்பி பல மாதங்கள் தூதுவிளைக்கீரையை ஆளவந்தாருக்குச் சமர்ப்பித்தும் ஆளவந்தாரைச் சேவிக்க முடியவில்லை. மணக்கால்நம்பி தூதுவிளைக்கீரை சமர்ப்பிப்பதை நிறுத்திவிட்டார். ஸத்வ குணம் தலையெடுத்த ஆளவந்தார் மணக்கால்நம்பியைத் தன் மாளிகைக்கு வரவழைத்தார். மணக்கால்நம்பியும், திருமந்த்ரம், துவயம், சரம ச்லோகத்தை உபதேசித்து இவைகளின் ஆழ்பொருளையும் அறிவித்து, அருளிச்செயலையும் கற்பித்து, தேவரீருடைய தகப்பனார் சேமித்து வைத்திருக்கும் நிதி, உபய காவேரி நடுவில் இருக்கிறதென்று அரங்கனைக் காண்பித்தார். ஆளவந்தாரும் பெரிய பெருமாளையும் நம்பெருமாளையும் திருவடி முதல் திருமுடிவரை சேவித்து,

"நிதியினைப் பவளத்தூணை
நெறிமையால் நினையவல்லார்
கதியினைக் கஞ்சன்மாளக்கண்டு
முன் அண்டமாளும்
மதியினை மாலை வாழ்த்தி
வணங்கியென் மனத்துவந்த
விதியினைக் கண்டு கொண்ட
தொண்டனேன் விடுகிலேனே"

என்று பாடி,

"என் அமுதினைக் கண்ட கண்ட
கண்கள்
மன்ருென் றினைக்காணுவே"

என்று பெரியகோயிலில் நித்யவாசமாக எழுந்தருளியிருந்தார்.

ஸ்ரீவைஷ்ண ஆசாரியாவதாரத்தின் பயனாக, ஆளவந்தார் பரமாண ப்ரமேய ப்ரமாதாக்களை வாழ்வித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

ப்ரமாணம்: அருளிச்செயலகளும்,
நானமறையும்
ப்ரமேயம்: அரங்கநகர் எம்பெருமான்
ப்ரமாதா: ஸ்ரீமந்நாதமுனி,
உய்யக்கொண்டார்,

மணக்கால்நம்பிகளுடைய அருளாசியுடன் பெரியநம்பி, திருவரங்கப்பெருமாளரையர், திருமாலையாண்டான், பெரிய திருமலைநம்பி, திருக்கோட்டியூர்நம்பி என்ற ஐந்து சிஷ்யர்களுக்கு முன்னோர் மொழிந்த உபதேசங்களை உபதேசித்து ஸ்வாமி எம்பெருமானாரொருவருக்கே உபதேசம் செய்ய நியமனம் செய்தார்.

चतुःश्लोकी, स्तोत्ररत्नं सिद्धित्रयम्
आगमप्रामाण्यम् ।

முதலான க்ரந்தங்களை அருளிச்செய்துள்ளார்.

பகவத் விஷயம், ஸ்ரீராமாயணம், பகவத்கீதை முதலியவைகளைப் பிரவசநம் செய்தருள்வார். இந்த ஆளவந்தாருக்குப் பாதி ராஜ்யம் கிடைத்ததன் பயனாக ராஜ பிளவை என்ற நோயும் துன்பம் அளித்தது. அதை மாறனேரி நம்பியிடம் கொடுத்து ஆநந்தமாகப் பெரிய கோயிலில் பேரின்பத்துடன் வாழ்ந்துவந்தார். · பெரிய திருமலைநம்பியைத் திருவேங்கடத்துறை செல்வனின் நித்ய கைங்கரியத்துக்கு அனுப்பினார். அவர் சேவித்த அருளிச்செயல் கிரமமே இப்பொழுதும் திருமலையில் நடந்துவருகிறது.



# ஸ்ரீ வேங்கடேஸ்வரா
# வன மேம்பாட்டுத் திட்டங்கள்

மனித இனம் என்றென்றும் மகிழ்ச்சியும், அதிசயமும் கொள்ளும் வகையில் காடுகள் ஆண்டாண்டு காலமாக விளங்கிவருகின்றன. இயற்கையின் ஆற்றலுக்கும் அழகுக்கும் என்றென்றும் புதுப்பொலிவும், புதுப்பொருளும் அளித்து வருவன காடுகளாகும்.

இத்தகு விலைமதிப்பற்ற இயற்கை வளத்தை புனிதமிகு திருமலையில் பாதுகாத்திடும் வகையில் 1981ஆம் ஆண்டு 'காடு வளர்ப்புத் திட்டம்' ஒன்றினை பெருமளவில் பெருமுயற்சியுடன் ஒரு புனித வேள்வியாக மேற்கொண்டு பல்வேறு இனங்களைச் சேர்ந்த சுமார் 25 லட்சம் மரங்களை திருப்பதி மற்றும் திருமலையில் வளரக்கும் பணியில் தி.தி. தேவஸ்தானம் ஈடுபட்டது. இதன் மூலமாக திருமலை மலைச்சரிவுகள், திருப்பதி நகரம் ஆகிய பகுதிகள் யாவும் பசுமையான 'வனச் செல்வத்துடன்' விளங்கிடவேண்டும் என்பதே திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் பெருவிருப்பமாகும்.

துவக்கப்பட்ட திட்டத்தின் பெருவெற்றியின் தூண்டுதலினால் தற்போது திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல்வேறு திட்டங்களைப் புகுத்தியுள்ளது. அதுதான் "ஸ்ரீவேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத்திட்டம்". இத்திட்டத்தினால், திருமலை திருப்பதி தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள இப்புது முயற்சிகளில் யாத்திரிகப் பொதுமக்களும் பங்கேற்கும் வகையில் வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், இத்திட்டத்திற்கு நன்கொடை வழங்கும் பக்தர்களுக்கு பலவிதமான நன்மைகளும் செய்யப்பட்டுள்ளன. இந்த 'வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டத்தின்' முக்கிய விவரங்கள் பின்வருமாறு:-

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

நன்கொடை ரூ. 25,000

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் 500 செடிகள் திருமலை மற்றும் திருப்பதியில் நடவப்படும். இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இம்மரங்கள், இச்செடிகள் அழைக்கப்படும். இச்செடிகள் ஐந்தாண்டுகளுக்குப் பராமரிக்கப்படும்.

### விருக்ஷ பிரஸாதம்

நன்கொடை ரூ. 15000

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் பயன்தரக்கூடிய 100 பழ அல்லது மலர் விதைகள் நன்கொடையாளர் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் 10 ஆண்டுகளுக்கு விநியோகிக்கப்படும்.

### ஸ்மாரக வனாலு (நினைவு மரங்கள்)

நன்கொடை ரூ.5000

இத்திட்டத்தின் கீழ் திருமலை - திருப்பதி மலைச்சரிவுகளில் உள்ள தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும். நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.

### வன சம்ரக்ஷண பாகஸ்வாம்யம்

நன்கொடை : ரூ. 2000

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத்தப்படும். இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக்கப்படும்.

சலுகை மாற்றங்களுடன் கூடிய இப்புதிய ஸ்ரீவேங்கடேஸ்வரா வன மேம்பாட்டுத் திட்டம் 1-2-96 முதற்கொண்டு ,செயல்படும். 31-1-96 தேதிக்கு முன்பு வரை இத்திட்டத்திற்கென நன்கொடை வழங்கிய பக்தர்கள், இத்திட்டத்திற்கென முன்பு அளிக்கப்பட்ட சலுகைகளைப் பெறுவர். நன்கொடை அளிக்கப்படும் மேற்படி தொகைகளுக்கு பிரிவு 35 CCB-இன் கீழ் 100 சதவிகிதம் வருமானவரி விலக்கு உண்டு.

**கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்**

**THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517 501.**

திருப்பல்லாண்டுக்கு மட்டுமே தனியன். நாச்சியார் திருமொழி முதலியவைகளுக்குத் தனியன் சேவிப்பதில்லை. திருக்கோட்டியூர்நம்பி "கலயாமி கலித்வம்ஸம்" தனியன் அருளிச்செய்வதற்கு முன்பே திருமலையில் நித்யாநுஸந்தான சேவை தோமாலையில் நடக்கிறது. திருமாலையாண்டானை அழகர்கோயிலுக்கு அனுப்பினார். திருக்கோட்டியூர் நம்பியைத் திருக்கோட்டியூருக்கு அனுப்பினார். திருக்கோட்டியூர் நம்பிக்கு இப்பொழுதும் பத்துநாள் உத்ஸவம் வாகநம், திருத்தேர் முதலியவைகளுடன் நடைபெறுகிறது.

திருவரங்கப்பெருமாள் அரையருக்குப் பெரிய கோயிலில் உடையவர் சந்நிதியின் சமீபம் பார்த்தசாரதி சந்நிதியில் திவ்ய மங்கள விக்ரஹம் எழுந்தருளப் பண்ணியிருக்கிறார்கள். பெரிய நம்பிக்குப் பெரியநம்பிதிருமாளிகையில் சந்நிதி. நம்பெருமாள் அலங்காரம் அனுப்புகிறார். திருமலைநம்பிக்கும் ஸ்ரீத் திருப்பதி கோவிந்தராஜர் சந்நதியில் சந்நிதி. புரட்டாசித் திருவிசாகத்தில் திருவேங்கடமுடையானின் பிரம்மோத்ஸவம் வருவதால் ஐப்பசி விசாகத்தில் திருமலையிலிருந்து பிரஸாதம் வந்து சேரும். பேரருளாளனுடன் பேசும் பாக்யம் பெற்ற திருக்கச்சி நம்பியைப் பல திவ்யதேசங்களில் எழுந்தருளப்பண்ணி இருக்கிறார்கள். இது ஆளவந்தார் சிஷ்ய ப்ரபாவம்.

இனி ஆளவந்தார் எம்பெருமானாரை ஆட்கொண்ட வைபவத்தைக் காண்போம். பெரிய திருமலைநம்பியின் மருமகனாராகிய ஸ்ரீராமாநுஜர், மாமாவிடம் பஞ்சஸம்ஸ்காரம் பெற்று, தன் அவதார காரணமான திருவல்லிக்கேணி எம்பெருமான் ஸ்ரீபெரும்பூதூர் ஆதிகேசவப் பெருமாள் முதலியவர்களுக்குக் கைங்கரியம் செய்து வாழ்நாளைப் பூர்த்தி செய்திருக்கலாம். அவரை, அத்வைதம் முதலான மதங்களைவென்று, "சங்கரபாஸ்கர யாதவபாட்ட ப்ரபாகர் தங்கள் மதம் சாய்வுற" என்று அவதாரப்பிரயோஜநம் செய்விப்பதற்காக யாதவப்ரகாசன் பாடசாலையில் சேர்த்தார்கள். வந்தது வினை.

राक्षसा: कलिरूपेण माठपत्य ब्रह्मन्यहो ।
श्रीवैष्णवान हि बाधन्ते तत्रापि निपुणान् कृशान् ॥

என்றும்,

राक्षसा: कलिमाश्रित्य जायन्ते ब्रह्मयोनिषु ।
ब्राह्मणानेव बाधन्ते तत्रापि श्रोत्रियान् कृशान् ॥

என்றும் கலியின் கொடுமை பலவாறு கூறப்படும்.

यथाकप्यासं पुण्डरीकमेवमक्षिणी ।

என்ற மறைவாக்யத்துக்கு ஸ்வாமி எம்பெருமானார் அருளிச்செய்த அர்த்தத்தைக் கேட்ட யாதவப்ரகாசன் மறுநிமிடமே எம்பெருமானாரைக் கங்கையில் தள்ளி, பரமபதத்துக்கு அனுப்ப முடிவு செய்துவிட்டார். இந்த நிலைமையில், ஒருநாள் ஸ்வாமி எம்பெருமானார் யாதவப் பிரகாசருடன் திருவீதியில் மற்ற மாணவர்கள் புடைசூழ எழுந்தருளினார்.

அந்த சமயம், பேரருளாளன் மங்களாசாஸநத்துக்கு எழுந்தருளிய ஆளவந்தார், திருக்கச்சி நம்பி மூலம் இந்தக் கூட்டத்தில் "ஸ்ரீராமாநுஜர் யார்?" என்று கண்டுபிடித்து, கடாட்சித்தருளினார். ஆளவந்தாரின் கருணை நிறைந்த கடாட்சம் ஸ்ரீராமாநுஜருக்கு அனைத்து நலன்களையும் அளித்தது. ஆளவந்தாரின் வாழித்திருநாமத்தில் "பாடியத்தோன் ஈடேறப் பார்வை செய்தோன் வாழியே" என்றிருக்கிறது. இந்[illegible] [illegible] [illegible] [illegible]லைத்[illegible] [illegible]து

## ஸர்வ தரிசனம்

திருமலைக் கோயிலில் ஸர்வதரிசனம் புதன், வியாழன் மற்றும் வெள்ளிக்கிழமைகளைத் தவிர நாளும் காலை 6 மணி முதல் 11 மணி வரையிலும், மதியம் 12 மணியிலிருந்து இரவு 7 மணி வரையிலும், இரவு 8 மணியிலிருந்து இரவு 10-30 மணி வரையிலும் அல்லது கூட்டத்தைப் பொறுத்து 'ஸர்வதரிசனத்'திற்காக பொதுமக்கள் அனுமதிக்கப்படுவர். சாதாரண நாட்களின் போது ஸர்வதரிசனம் நாள் ஒன்றிற்கு $14\frac{1}{2}$ மணி நேரங்களும், கூட்டம் அதிகமாக இருக்கும் நாட்களின் போது நாள் ஒன்றிற்கு 18 முதல் 20 மணி நேரங்கள் வரை அனுமதிக்கப்படும்.

## விண்ணப்பம்

'ஸப்தகிரி' இதழுக்குக் கதை, கட்டுரைகள், துணுக்குகள் அனுப்புமாறு எழுத்தாளர் பெருமக்களை மேலாண்மை கேட்டுக்கொள்கிறது. பிரசுரிக்கப்படும் கதை, [illegible]களுக்கு மட்டுமே [illegible]த்தொகை வழங்கப்படு[illegible]

ஆசிரியர்.

# திருப்பதியிலிருந்து
# இரயில் கால நேர விவரங்கள்

## அகல இருப்புப்பாதை

| இரயில் எண். | புறப்படும் நேரம் | சேரும் இடம் | இரயில் பெயர் |
|---|---|---|---|
| 475 | 23-30 | காகினாடா | காகினாடா பிரயாணி வண்டி |
| 217 | 22-00 | மைசூர் | மைசூர் பிரயாணி வண்டி |
| 7425 | 18-30 | செகந்திராபாத் | நாராயணாத்ரி விரைவு வண்டி |
| 7487 | 19-00 | விசாகப்பட்டினம் | திருமலா விரைவு வண்டி |
| 7430 | 15-30 | ஹைதராபாத் | ராயலசீமா விரைவு வண்டி |
| 6054 | 10-05 | சென்னை | ஸப்தகிரி விரைவு வண்டி |
| 559 | 14-15 | ஓங்கோல் | ஓங்கோல் பிரயாணி வண்டி |
| 7489 | 13-45 | | வாரணாஸி விரைவு வண்டி (செவ்வாய்க்கிழமை) |
| 7490 | 13-45 | கொச்சி | கொச்சின் விரைவு வண்டி (ஞாயிற்றுக்கிழமை) |
| 7491 | 13-45 | வாரணாசி | வாரணாஸி விரைவு வண்டி (புதன்/வெள்ளிக்கிழமை) |
| 8480 | 9-45 | பூரி | பூரி விரைவு வண்டி |
| 6058 | 17-30 | சென்னை | ஸப்தகிரி விரைவு வண்டி |
| 6208 | 6-30 | ஹைதராபாத் | கடப்பா விரைவு வண்டி |
| 529 | 6-55 | கூடூர் | கூடூர் பிரயாணி வண்டி |
| 7405 | 5-30 | ஹைதராபாத் | கிருஷ்ணா விரைவு வண்டி |
| 196 | 4-05 | அரக்கோணம் | அரக்கோணம் பிரயாணி வண்டி |

## குறுகிய இருப்புப்பாதை

| | | | |
|---|---|---|---|
| 6799 | 15-40 | மதுரை | மீனாட்சி விரைவு வண்டி |
| 247 | 6-00 | குண்ட்டக்கல் | குண்ட்டக்கல் பிரயாணி வண்டி |
| 157 | 10-30 | காட்பாடி | காட்பாடி பிரயாணி வண்டி |
| 7598 | 14-40 | மெஹ்பூப்நகர் | வெங்கடாத்ரி விரைவு வண்டி |
| 187 | 17-30 | காட்பாடி | காட்பாடி . பிரயாணி வண்டி |
| 191 | 7-00 | காட்பாடி | காட்பாடி பிரயாணி வண்டி |
| 287 | 21-45 | குண்ட்டக்கல் | குண்ட்டக்கல் பிரயாணி வண்டி |
| 643 | 8-45 | காட்பாடி | காட்பாடி பிரயாணி வண்டி |

## அறிவிப்பு

**திருமலை திருப்பதி தேவஸ்தானம் அந்தந்த மாநில இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறையின்கீழ் பதிவு செய்யப்பெற்றக் கோயில்கள் பயனுறும் வகையில் கீழ்வரும் சலுகைகள் வழங்கியுள்ளது.**



**கோயில்களுக்குத் தேவையான கோயில்குடைகளை தி.தி.தேவஸ்தானம் 50% தள்ளுபடி விலையில் வழங்கி வருகிறது. இதற்கு அந்தந்த கோயிலுக்குரிய செயலாட்சித் தலைவரின் விண்ணப்பக் கடிதத்துடன் இரண்டு குடைகளுக்காக ரூ.1050/- அனுப்புதல் வேண்டும்.**



**கோயில்களுக்கான ஒலிப் பெருக்கிக் கருவிகளை 50% தள்ளுபடி விலையில் தி.தி. தேவஸ்தானம் வழங்கிவருகின்றது. இதற்கு அந்தந்த கோயிலுக்குரிய செயலாட்சித் தலைவரின் விண்ணப்பக் கடிதத்துடன் ரூ. 3370/- அனுப்புதல் வேண்டும்.**

**முழுவிபரங்களுக்குச் 'செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.**

பார்த்தால் நவில்தொறும் நூல் நயம் போல, இந்த ஸ்ரீராமாநுஜரே மறுஅவதாரத்தில் ஈடு முப்பத்தாறுயிரப் பெருக்கராகத் திகழ்ந்து நம்பெருமாள் திருவாக்கால்,

"ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்த்ர ப்ரவணம் வந்தேரம்ய ஜாமாதரம்முநிம்"

என்ற தனியன் கேட்கும் பாக்யம் கிடைக்க அருள்புரிந்தது ஆளவந்தார் கடாட்சமே என்பது தெளிவாகும்.

"மேல்நான் அறியோமை என்
செய்வானென் னினாய் கண்ணனே"

என்று, ஸ்ரீராமாநுஜர் யாதவப் ரகாசருடன் பயணம் செய்தபொழுது, யாதவ ப்ரகாசரின் சதித்திட்டத்தை எம்பார் மூலம் அறிந்து, யாதவரின் குழாத்திலிருந்து பிரிந்து,

"ஆவாரார் துணையென்று அலைநீர்க்
கடலுள் அழுந்தும் நாவாய்போல்"

ஸ்ரீராமாநுஜர் வழி திகைத்து வருந்தும் பொழுது, பேரருளாளனே, வேடன் வேடத்தில் சென்று, ஸ்ரீராமாநுஜரிடம், "ரொம்ப தாகமாக இருக்கிறது" என்று கேட்க, ஸ்ரீராமாநுஜரும் அதிகாலையில் நீர் நிலையைக் கண்டுபிடித்து, தீர்த்தம் சமர்ப்பிக்கிறேன் என்று சொல்லி திருக்கண் வளர்ந்தருளினார். (உறங்கினார்).

பேரருளாளன் ஒருபொழுதில் ஸ்ரீராமாநுஜரைக் காஞ்சியில் சேர்த்துவிட்டார். இதுவும் ஆளவந்தார் கடாட்சத்தின் பயனே.

மறுநாள் முதல் தீர்த்தங்களாயிரமான திருவாய்மொழியை வாயினால் பாடிக்கொண்டு, சாலைக்கிணற்றிலிருந்து திருவாராதனத்துக்குத் தீர்த்தமும் சமர்ப்பிக்க ஆரம்பித்தார். இப்பொழுதும், மார்கழிமாதம் திருவத்யயனோத்ஸவம் முடிந்த மறுநாள் பேரருளாளன் சாலைக்கிணற்றின் கரைக்கு எழுந்தருளி திருப்பல்லாண்டு ஆரம்பிக்கப்படுகிறது. ஸ்ரீராமநுஜருக்கு ஆளவந்தாரின் கடாட்சத்தால் திருக்கச்சி நம்பியுடன் நட்பு ஏற்பட்டது. ஸ்ரீராமநுஜர் திருக்கச்சி நம்பி மூலம் பேரருளாளனின் ஆறுவார்த்தைகளைக் கேட்டு அறிந்தார்.

१. अहमेव परं तत्वं २. दर्शनं भेद एव ३. प्रपत्तिः उपाय; ४. अन्तिमस्मृतिवर्जनं ५. देहावसाने मुक्तिः ६. महापूर्ण समाश्रय ।

மறுநிமிடமே ஸ்ரீராமாநுஜர பெரிய கோயிலுக்குப் பெரிய நம்பியைத் தெண்டன் சமர்ப்பிக்கப் புறப்பட்டார். பெரிய நம்பியும் ஆளவந்தார் நியமனத்துடன் பெருமாள் கோவிலுக்கு (காஞ்சிக்குப்) புறப்பட்டார். இருவரும் மதுராந்தகத்தில் சந்தித்தார்கள். பஞ்ச ஸம்ஸ்காரம் நடந்தது. இருவரும் வந்தவழியே திரும்பினார்கள்.

வேறொரு சமயம் ஆளவந்தார் நியமனத்துடன் ஸ்ரீராமாநுஜரை அழைத்துவர, பேரருளாளன் சந்நிதிக்கு வந்து, திருமஞ்சனம் எழுந்தருளப்பண்ணும் ஸ்ரீராமாநுஜர் திருச்செவி சாத்தும்படி ஸ்தோத்ர ரத்னம் சேவித்தார்.

ஸ்ரீராமாநுஜரும் 'இதை அருளிச்செய்தவர் நிகழ்காலத்தில் எழுந்தருளியிருக்கிறாரா?' என்று கேட்டார். திருமேனி பாங்குடன் எழுந்தருளியிருக்கிறார் என்று சொல்லி ஸ்ரீராமாநுஜரைப் பெரியகோயிலுக்குப் பெரிய நம்பி அழைத்துச் சென்றார். ஆனால் "நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை" என்ற குறளுக்குச் சான்றாக, ஆளவந்தார் பரமபதத்துக்கு எழுந்தருளி ஆளவந்தாரின் சரமத் திருமேனியைச் சேவிக்கும் பாக்யமே ஸ்ரீராமாநுஜருக்குக் கிடைத்தது. அப்பொழுதும் ஸ்ரீராமாநுஜரின் திருக்கண்களுக்கு ஒன்று தென்பட்டது. யாதெனில், ஆளவந்தாரின் கையில் மூன்று விரல் மூடியிருந்ததைக் கண்டார். உடனே அருகில் உள்ள ஆசாரியர்களிடமிருந்து ஆளவந்தாரின் மூன்று குறைகளை அறிந்து, "அடியேன் பூர்த்தி செய்கிறேன்" என்று ஸ்ரீராமாநுஜர் தெரிவித்தவுடன் மூன்று விரல்களும் நிமிர்ந்தன. இது என்ன ஆச்சரியம் என்று அனைவரும் கூறினார்கள்.

ஆளவந்தார் திருமேனியைச் சேவித்த ஸ்ரீராமாநுஜர், இப்படி ஆசாரியனையும் சிஷ்யனையும் ஒரு நிமிடம் கூடப் பேசவிடாமல் பரமபதத்துக்கு அனுப்பிய பெரிய பெருமாளின் திருமுக மண்டலத்தைச் சேவிக்கமாட்டேன்று காஞ்சிக்கே திரும்பி விட்டார்.

முடிவுரை :

இப்படி ஆளவந்தாரின் அருள் நோக்கு ஒன்றே பெற்று ஆளவந்தாரின் ஐந்து சிஷ்யர்களின் க்ரந்தப்ரவசநத்தைக் கேட்டு ஸ்வாமி எம்பெருமானார் இந்த இருள்தரும் மாஞாலத்தில் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை ஸ்தாபித்தருளினார். "யாமுநார்ய ஸுதாம் போதி மவகாஹ்ய யதாமதி" என்று ஸ்ரீபாஷ்யகாரரே ஆளவந்தாரின் மாண்பை அறிவித்துள்ளார். இவை அனைத்தும் அரங்களின் திருவிளையாடலே என்று உணர்ந்து இன்புறுவோம்.



# யாமுநாசார்யர் - திருமகள் - ஓர் உரையாடல்

**ஸ்ரீமத்பூஷணம் என். ராமஸ்வாமி அய்யங்கார் - ஸ்ரீவில்லிபுத்தூர்.**

நமச் ஸ்ரீரங்க நாயக்கை யத்ப்ரூ
விப்ரம பேதத: ।
ஈசேசிதவ்ய வைஷம்ய
நிம் நோந்நத மிதம் ஜகத் ।।

## முன்னுரை :

பாரோர் புகழும் பங்குனி மாதத்தில் உத்திரநாளில் அவதரித்தவள் திருமகள். "பங்குனியில் உத்திரநாள் பாருதித்தாள் வாழியே" என்று அவளை அனைவரும் போற்றுகின்றனர். "பால்குநோத்தர பல்குந்யாம் ஸம்பூதாம் ச்ரியமாச்ரேயே" என்கிற வசனப்படியும் திருமகளின் அவதாரம் பேசப்படுகிறது. திருமகளின் பெருமையை பேசிய ஆசார்யர்களுள் முதன்மை ஸ்தானம் பெறுமவர் யாமுநாசார்யர் என்று போற்றப்படும் ஆளவந்தார். அவர் திருமகளின் பெருமையை பேசியிருப்பதை ஓர் உரையாடல் மூலம் ஈண்டு விவரிக்கப்படுகிறது.

## உரையாடல்

யாமுநாசார்யார்: மங்கையர்கள் திலகமென வந்த செல்வியே! உன் பெருமையைப் பேசப்போகிறேன். கேட்பாயாக. நீ பகவதி; கல்யாண குணங்களால் நிறைந்தவள். புருஷோத்தமனான பகவான் உனக்கு பிரியனான கணவன். கீதையில் (15-19)

யோ மாமேவஸம் மூடோ ஜாநாதி
புருஷோத்தமம் ।
ஸ ஸர்வவித் பஜதி மாம்
ஸர்வ பாவேந பாரத ।।

"அர்ஜுந! எவனொருவன் புருஷோத்தமனான என்னை மயக்கமற்றவனாய் இப்படி அறிகிறானோ அவன் எல்லாம் அறிந்தவன்; எல்லாவிதத்தாலும் அவன் என்னை பஜனம் செய்கிறான்" என்று பகவான் தன்னை புருஷோத்தமன் என்று கூறியுள்ளான். ஜிதந்தே என்கிற துதி நூலில் "மஹாபுருஷ" என்றும் "புருஷோத்தம" என்று பேசப்படக்கூடியவன் பகவான். பரம ஸம்ஹிதையில்,

நஸம் பதாம் ஸமாஹாரே விபதாம்
விநிவர்த்தநே ।
ஸமர்த்தோ த்ருஸ்யதே கச்சித்
தம்விநாபுருஷோத்தமம் ।।

"செல்வங்களை சேர்த்துக் கொடுப்பதிலும் ஆபத்துக்களை அடியோடு போக்குவதிலும் ஸமர்த்தனாயிருப்பவன் அந்தப் புருஷோத்தமனைத் தவிர வேறொருவனும் காணப்படுகிறதில்லை" என்று பேசப்பட்டிருக்கிறான் பகவான். அந்த பகவான் உனக்கு பதி.

'மங்களாநாஞ்ச மங்களம்' எல்லாம் மங்களுக்கும் மங்களமாகயிருக்கும் பகவான் உனக்கு பதி. 'விச்வபதி' என்று உலகிற் பதியானவன் உனக்கு பதி. உனக்கேற்கும்' என்று நீ பகவானுக்கு ஸமமாக இருப்பதுபோல பகவானும் திருத்தக்க செல்வனாயிருக்கிறான். "லக்ஷ்மீ ச்ச பத்நயௌ" என்று பத்நீ ஸம்பந்தத்தாலே பகவானுக்கு பெருமை சொன்னாப்போலே, 'புருஷோத்தமஸ் தே காந்த:' என்று பதி ஸம்பந்தத்தாலே உனக்கு பெருமை. 'ஸ்ரீய: பதி' என்று பகவானுக்கு பெருமை. 'வரதவல்லபா' என்று உனக்கு பெருமை.

தாயே! உனக்கு மணவாளனான பின்பு பகவான் புருஷோத்தமனாக ஆனான். "க: ஸ்ரீ: ஸ்ரீய: (திருவுக்கு திருவாகிய செல்வன் யார்?) என்று கூறியபின்புதான் "புருஷோத்தம: க:" (புருஷோத்தமன் எனப்படுவன் யார்?) என்று துதி நூலில் கூறியுள்ளேன்.

வேதாந்தங்கள் பகவானை பரதத்துவம் என்று நிர்ணயித்ததும் உன்னுடைய பாத சின்னங்களை பகவான் மார்பில் கண்ட பின்பே என்பர் பெரியோர். உனக்கு கேள்வனான பின்புதான் பகவான் பெருமையுடைய பிரானாரானார். நம்மாழ்வார் "திருமகளார் தனிக்கேள்வன் பெருமையுடைய பிரானார்." (திருவாய் 1-6-9) என்றார்

எப்படி பகவான் ஸர்வ வ்யாபியாயிருக்கிறானோ, அப்படியே நீயும் ஸர்வ வ்யாபினியாயிருக்கிறாய் என்று ஸ்ரீவிஷ்ணு புராணம் (1-8-17)

நித்யைவைஷா ஜகந்மாதா
விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ ।
யதா ஸர்வ கதோ விஷ்ணுஸ்
ததைவேயம் த்விஜோத்தம ।।

கூறுகிறது. உபய விபூதியும் உனக்கு அடிமைப்பட்டிருக்கிறது. வேதம். "ஈசாநா தேவீபுவநஸ்யாதி பத்நீ" (உலகிற்கு ஈஸ்வரியாகவும் ஸர்வாதிகனுக்கு பத்தினியாகவும்

இருக்கிறாள்) என்றும், ஸ்ரீஸூக்தம் ஈஸ்வரீம் ஸர்வபூதாநாம் த்வாமி ஹோபஹ்வயே ச்ரியம் (ஸர்வ பூதங்களுக்கும் ஈஸ்வரியாய் ஸ்ரீதேவியான உன்னை இங்கு வரும்படி அழைக்கிறேன்) என்றும் உன் பெருமையை பேசுகின்றன.

தேவி! உன் பெருமையை வேதங்களும் வேதாந்த வேத்யனும் மிக்க வேதியரும் பேசியுள்ளார்கள்.

திருமகள் : யாமுநாசார்யரே! அழகாகச் சொன்னீர். நித்ய சூரி களில் எனக்கு அடிமை செய்வார் உண்டோ?

யாமுநாசார்யர் : விஷ்ணு பத்நியே! நித்யசூரிகளில் தலைவன் திருவனந்தாழ்வான் என்கிற ஆதிசேஷன். அவனுக்கு ஆயிரவாய். "மன்னியபல்பொறி சேர் ஆயிர வாய் வாளரவின் சென்னி மணிக்குடுமி" (பெரியதிருமடல் 1-2) என்றும் "வாயோரீரைஞ்ஞூறு" (பெருமாள் திருமொழி 1-1) என்றும் சொல்கிறபடியே உம்மைப் புகழுவதற்கு பலவாய்த் தலைகளையுடையவன் உமக்குத் தொண்டு செய்ய அநேக தேஹங்களை பரிஹரிப்பவன். ஆரவாரம் கேட்டால் அஸ்தாநே பயஸங்கை பண்ணி அழல் உமிழ்பவன். 'அரவரசப்பெருஞ் சோதி' என்று அநேக திருநாமங்களையுடையவன். சிறந்த ஞானசக்திகளுக்கு முக்யமான இருப்பிடமாயிருப்பவன். அவன் உனக்கு படுக்கையாகவும், சிங்காசனமாகவும் இருக்கிறான். ஆழ்வார்கள் அனந்தன் உகந்து இருவருமான சேர்த்தியில் பணி செய்வதை

"அணைவதரவணை மேல் பூம்பாவையாகம் புணர்வது" (திருவாய். 2-8-1)

"தீவாய் நாகணைமேல் துயில்வானே திருமாலே" (பெரிய திரு. 7-7-9)

"சுடர்ப் பாம்பணை நம்பரனைத் திருமாலை" (திருவாய் 8-7-11)

என்று அருளிச்செய்துள்ளார்கள். உன் பெருமையோ பெருமை.

திருமகள் : தூயநெறிசேர் எதிகட்கிறைவனே! அனந்தன் மட்டும்தானா எனக்கு அந்தரங்கை அடிமை செய்கிறான்?

யாமுநாசாரியர் : பங்கயப் பூவிற் பிறந்த பாவைநல்லாளே! நாக ஜாதிகளுக்கு நாயகனான அநந்தன் உனக்கு திருப்படுக்கையானாப்போலே, வேதமயனாய் பறவைகளுக்கு ஆதாரனாயிருந்துள்ள பெரிய திருவடி (கருடன்) உனக்கு ஆஸநம்; வாஹனம். ஆழ்வாரும் "பொருசிறைப் புள்ளூ வந்தேறும் பூமகளார்" (திருவாய் 1-9-3) என்று அநுபவித்தார். மேலும் உன்னை "கருடா கருடாஸநா" (கருடை என்றும் பெயருடையவள்; கருடனை ஆஸநமாக யுடையவள்) என்று ஸ்ரீஸஹஸ்ரநாமம் தெரிவிக்கிறது. வேதத்தை சரீரமாகயுடையவனும் புள்ளரையனுமான பெரியதிருவடி உனக்கு ஆஸநமாகவும் வாஹனமாகவும் இருக்கும் பெருமையுடையவள் நீ அல்லவா. இதுகாறும் உன்னுடைய நித்திய விபூதி யோகத்தை கூறினேன்.

திருமகள் : நற்கடகவுத்திராடத்தவதரித்தோனே! எனக்கு நித்தியவிபூதியோகம் மட்டும் தானா? லீலாவிபூதியோகம் உண்டோ?

யாமுநாசாரியர் : செங்கமலச் செய்யரங்கம் செழிக்க வந்தானே! லீலாவிபூதியோகமும் உண்டோ என்கிறாயே. சொல்லுகிறேன் கேள். நீயோ உபய விபூதிநாயகனுடைய தர்மபத்நி. யோகத்திற்கு குறைவு ஏது? உலகத்திற்கு மோஹத்தை உண்டுபண்ணும் ப்ரக்ருதி உனக்கு முகத்திரையாக இருக்கிறது. உபநிஷத் மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந் மாயிநம் து மஹேச்வரம் (மாயை எனப்படுவது ஆச்சரியமான ச்ருஷ்டிக்கு ஹேது வாயிருக்கும் ப்ரக்ருதி என்றும், அந்த மாயையைத் தூண்டும் மாயோனை ஸர்வேச்வரன் என்றும் அறியக்கடவீர்) என்றும்

அஸ்மாந் மாயீ ஸ்ருஜ தே விச்வமேதத
தஸ்மிம்ச்சாந்யோ மாயயா
ஸந்நிருத்த:

(இந்த மாயையையாகிற ப்ருக்ருதியிலிருந்து மாயோனாகிற பகவான் இவ்வுலகைப் படைக்கிறான். அதில் ஜீவனாகிற மற்றொருவன் மாயையினால் கட்டுண்டுகிடக்கிறான்) என்றும் மாயையைப் பற்றி பேசுகிறது. கீதையில் (7-14)

தைவீ ஹ்யேஷா குணமயீ மம
மாயா துரத்யயா ।
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயா
மேதாம் தரந்தி தே ॥

(தேவனாகிற என்னால் நிர்மிக்கப்பட்டதும் முக்குணங்களை உடையதுமான இந்த என்னுடைய மாயை தாண்ட அரிதானது. என்னையே எவர்கள் சரண் அடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகிறார்கள்) என்று பகவான் கூறியுள்ளான். இப்படிப்பட்ட பகவான் மாயையன்றோ உனக்கு யவநிகை. அதாவது உனக்கு சேஷமாயிருக்கிறது.

திருமகள் : யாமுநாசாரியரே! மூலப்ரக்ருதி மட்டும் தானா எனக்கு அடிமைப்பட்டிருக்கிறது.

யாமுநாசாரியார் : வேரி மாருதபூமேலிருப்பவளே! பிரமன், சிவன, இந்திரன் முதலிய தேவ ஸமூஹம் உன்னுடைய தாஸ கணங்கள். அவர்களுடைய பத்னிகளான ஸரஸ்வதி, ருத்ராணீ, இந்த்ராணீ முதலியோர் உனக்கு தாஸீகணங்கள், "நீலார் கண்டத்தம் மானும் நிறைநான்முகனும் இந்திரனும் - சேலேய் கண்ணுர் பலர் உன்னை சேவித்திருக்கிறுர்களென்றுல் உன் பெருமை பேசத்தானாவது உண்டோ?

திருமகள் : நாகணையான் வீரநாராயணத்துதித்தோனே! நீர் சொல்லும் ஸ்தோத்ரம் எனக்கு எப்படிப் பொருந்தும்?

யாமுநாசாரியர் : சிந்தை தன்னுள் நீங்காதிருக்கும் திருவே! உன்னுடைய திருநாமம் "ஸ்ரீ". அப்பதத்தின் பொருளை பாஞ்சராத்ரம் (அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை 21-8)

ச்ருணுதி நிகிலாந் தோஷாந்
ச்ருணுதி சகுணைர் ஜகத் ।
ஸ்ரீயதே சாகிலைர் நித்யம்
ச்யரதே ச பரம் பதம் ॥
ச்ரயந்தீம் ஸ்ரீயமாணுஞ்ச
ச்ருண்வதீம் ச்ருணதீமபி ॥

(அடியார்களுடைய தோஷங்களை போக்குகிறுள். அவர்களுடைய அத்வேஷம், ஆபிமுக்யம் முதலான குணங்களை பெருக்குகிறுள். அடியார்களாலே தினந்தோறும் ஆச்ரயிக்கப்படுகிறுள். பரமப்ராப்யனான பகவானை ஆஸ்ரயித்திருக்கிறுள். அடியாருடைய கூக்குரலைக் கேட்கிறுள். அவற்றை எம்பெருமானைக் கேட்பிக்கிறுள். ஆகையால் பிராட்டிஸ்ரீ என்று கூறியிருக்கிறது. உள்ளேயே 'ஈச்வரீம் ஸர்வ பூதானாம்' (எல்லா பூதங்களுக்கு ஈச்வரி) என்றும், அஸ்யே சாநாஜகதோ விஷ்ணுபத் நீ (இந்த உலகிற்கெல்லாம் ஸ்வாமினியாகவும், விஷ்ணுவுக்கு பத்தினியாகவும் இருப்பவள்) என்றும் ப்ரமாணங்கள் பேசுகின்றன. மேலும் பகவானை பகவந்நாராயண என்று கூறுவதுபோல உன்னையும் 'பகவதீம் ஸ்ரீரியம் தேவீம்' என்று கூறுகிறுர்கள். இப்படிப்பட்ட பெருமைகள் பொருந்திய உன்னை அறிவிலிகளான நாங்கள் எப்படிச் சொல்லுவோம். உன்னுடைய பரத்வத்தை பேசுவது நிலமல்ல.

திருமகள் : யாமுநாசாரியரே! எனக்கு பரத்வம் என்கிற பெருமை ஒன்றுதானோ?

யாமுநாசார்யர் : உலகுக்கெல்லாம் தலைவியே! லோகங்களுக்கெல்லாம் ஸ்வாமியான எம்பெருமானுக்கு ப்ரிய மஹிஷியாயிருப்பவளே! உம்முடைய பெருமையை ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனான எம்பெருமானும்கூட அளவிட்டு அறிய முடியாது. "தனக்கும் தன் தன்மையறிவறியானை" (திருவாய் 8-4-6) என்றும், "தாம் தம் பெருமை அறியார்" (பெரிய திருமொழி 5-2-1) என்றும் பேசியிருப்பன போல பகவானுடைய பெருமையை அவனாலே அறியமுடியாதாப்போலே, உன்னுடைய மகிமையையும் இவ்வளவு என்று பகவான் அறியமாட்டான்.

திருமகள் : யாமுநாசாரியரே! அப்படிப்பட்ட பெருமைகளையுடைய என்னை எப்படி துதிக்கத்துணிந்தீர்?

யாமுநாசாரியார் : தாயே! அடியேன் உனக்குத்தாஸன். அசரண்ய சரண்யையான் உன்னை அநந்ய சரணுன நான் சரணம் புகுந்தேன். என்னுடைய பூர்வாபராதங்களையும் உன்னுடைய பூர்த்தியையும் நினைத்து உன்னிடம் அடைக்கலம் புகுந்தேன். ஆழ்வாரும் "பூமேலிருப்பாள் வினைதீர்க்கும்" (திருவாய் 4-5-11) என்று அருளிச்செய்ததை நினைத்து சரண புகுந்தேன். ஆகவே நிர்ப்பயனாய் துதிக்கிறேன். உன்னுடைய கருணையை அறியும் நான் பயமற்றவனாய் துதிக்கிறேன். நீ அனுக்ரஹமே வடிவெடுத்தவள்; நிக்ரஹமே அறியாதவளாயிற்றே. உமக்கு ஆச்ரித பக்ஷபாதம் குறைவற்றதென்பதை அடியேனறிவேன். அடியேனும் ஆச்ரிதர்களில் ஒருவனாயிருக்கிறேன். ஆதலால் நிர்ப்பயனாய் ஸ்துதிக்கப் புகுகின்றேன்.

திருமகள் : யாமுநாசாரியரே! என்னுடைய கருணையை புகழ்ந்து பேசினீர். நாம் உம்மை கடாக்ஷித்ததனாலே உம்முடைய மனோரதம் நிறைவேறினதாகச் சொன்னீர். உலகத்தோர்க்கு அவரவர்களுடைய இஷ்டாநிஷ்ட ப்ராப்தி பரிஹாரங்களுக்கு அவ்வருவருடைய புண்யபாவங்களன்றோ காரணம். அப்படியிருக்க உம்முடைய அபிமதம் நம்முடைய கடாக்ஷத்தாலே ஸித்தித்து என்பது எப்படிப் பொருந்தும்?

யாமுநாசாரியர் : தேவி! நான் ஒரு விஷயத்தில் பக்ஷபாதத்தினால் சொல்லவில்லை. உன்னுடைய கடாக்ஷமில்லாமையாலே மூவுலகும் முன் நசித்து கிடந்தன. "அஸந்நேவ" என்றும் "ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா

அன்று" என்றும் சொல்லுகிறபடியே மூன்று உலகங்களும் நாம, ரூபம் இல்லாமல் இருந்தன. உன்னுடைய கருணாகடாக்ஷமாகிற அம்ருத வர்ஷத்தினால் அந்த உலகங்கள அளவற்ற பெருமையுடையதாகும்படி காப்பாற்றப்படுகிறது. ஆகவே நீ ஜகத் காரண வஸ்து என்று போற்றப்படுகிறாய். மேலும் மனிதர்களுக்கு ஐச்வர்யம், கைவல்யம், பரமபதம் இவைகளின் மேன்மையானது தாமரைக் கண்ணனின் மனத்துக்கினியவளான உன் அருளில்லாமல் ஏற்படாது.

ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம் வா
கஸ்மைசிதஞ்ஜலிபரம்
வஹதே வி தீர்ய ।
அஸ்மை ந கிஞ்சிதுசிதம் க்ருதமித்ய தாம்ப
த்வத் லஜ்ஜஸே கதய
கோயமுதார பாவ: ।।
ஸ்ரீகுண. 59

(தாயே! ஐச்வர்யம், கைவல்யம், பரமபதம் ஆகிய இவற்றில் ஒரு அஞ்சலிச்சுமையை சுமப்பவனுக்குக் கொடுத்தும், "இவனுக்கு தகுந்தொன்றும், செய்யப்பெற்றிலோமே" என்று நீ வெட்கப்படுகிறாய். ஈதென்ன வண்மை. நீயே சொல்வாயாக) என்று பின்புள்ளாரும் உன் பெருமையைப் பேசப்போகிறார்கள்.

ஆழ்வார்களும் "திருமாமகள் தன்னருளாலுலகில் தேர்மன்னராய்" (பெரிய திரு. 2-9-10) என்றும், "செடியாராக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமால்" (திருவாய். 1-5-7) "திருமாமகளால் அருள்பெற்றுப் பொன்னுலகில் பொலிவர் தாமே" (பெரிய திரு. 11-6-10) என்றும் அருளிச்செய்தபடியே ஐச்வர்ய, கைவல்ய,பகவல்லாபம் முதலிய் புருஷார்த்தங்களிலெல்லாம் உன்னுடைய ப்ரஸாதத்தாலல்லது பெற அரிது.

திருமகள் : யாமுநாசாரியரே! என் பெருமையை வெகு அழகாகச் சொன்னீர். என்னுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தைப் பற்றி தெரிவிக்கவில்லையே.

யாமுநாசாரியர் : மங்களம் தரும் மகாலட்சுமியே! என்னுடைய துதியை இன்னம் முடிக்கவில்லையே. உன்னுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தை பற்றிச் சொல்லுகிறேன் கேள். உனக்கு பசி, தாகம், சோகம், மோஹம், கிழத்தன்மை, மரணம் என்கிற அறுவகையான அவத்யங்கள் கிடையாது. குறைவுபடுதல், நாசமடைதல், மாறுபாடடைதல், வளருதல், பிறத்தல் இவைகள் இல்லாதவள் நீ. எப்போதும் இருப்பவள் நீ. உன்னை தேச, காலவஸ்துக்களினால் அளவிட்டு அறியமுடியாது. உன் ஸ்வரூபம் ஜ்ஞாநாநந்த மயம். பெரிய விபூதியையுடையவள். இதனால் உனக்கு விபுத்வம் உண்டு என்று தெரிகிறது. உனக்கு ஸமமானவரும் மேலானவரும் ஒருவரும் காணப்படவில்லை. பெரிதாயிருப்பதாலும் பிறரை பெரிதாகச் செய்வதாலும் பரஹ்மம் என்று நீ பேசப்படுகிறாய். இத்தைய திவ்யாத்ம ஸ்வரூபத்தையுடையவள்.

திருமகள் : யாமுநாசாரியரே! திவ்யாத்ம ஸ்வரூபத்தைச் சொன்னீர். என்னுடைய திவயமங்கள விக்ரஹத்தின் ஸ்வரூபத்தைப் பற்றி தெரிவிக்கவிலலையே.

யாமுநாசாரியார் : மலரின் மேவுதிருவே! உன்னுடைய திவ்ய மங்களவிக்ரஹத்தின் ஸ்வரூபம் மிகவும் அத்புதமானது.

"பகவந் நாராயணபிமதாநுரூப ஸ்வரூப ரூப விபவைச்வர்ய சீலாத் யநவதிகாதிசய அஸங்க்யேய கல்யாண குணங்களும்..... (எல்லா கல்யாணகுண பரிபூர்ணனான நாராயணனுக்கு உகப்பா
யும் தகுந்துமிருக்கிற ஸ்வரூபமென்ன, விக்ரஹமென்ன, விக்ரஹ குணங்களென்ன, விபூதிகளென்ன இவைகளையும் ஐச்வர்யம், ஸௌசீல்யம் முதலிய எண்ண முடியாத குணங்களை உடையவள்) என்று பின்புள்ளாரும் உன் பெருமையைப் பேசப் போகிறார்கள்.

எம்பெருமான் இஷ்டப்படி விளையாட எந்தெந்த ரூபங்கள் உண்டோ அந்தந்த ரூபங்கள் உனக்கு அஸாதாரணமானவைகள். ஸ்ரீபாஞ்சராத்ரம்,

குணைர் விலாஸை ரூபைச்ச
ஸ்வாத்மா வாத்ம மதீச்வரம்
நியச்சந்தீம் அகாண்டாண்ட
நியந்த்ரீஞ்ச ஸ்தும: ச்ரியம் ।।

(குணங்களாலும் செய்கைகளாலும் ரூபங்களாலும் தன்னுடைய ஸ்வரூபத்தாலும் தன்னிடத்தில் ஈஸ்வரனை அடக்கிக்கொண்டிருப்பவளாய் எல்லா அண்டங்களை நியமிப்பவளான ஸ்ரீதேவியை துதிக்கிறோம்) என்றும்,

வ்யூஹேஷுசைவ ஸர்வேஷு
விபவேஷுசஸர்வஸ: ।
ததா வ்யூஹ்பவத்யேஷா
மமசைவாநபாயிநீ ।।

(எல்லா வ்யூஹங்களிலும் எல்லா விபவங்களிலும் என்

ணைவிட்டு பிரியாதவளாய் இப் பிராட்டியும் அவதாரம் எடுக்கி றாள்) என்றும்,

லக்ஷ்மீ தந்த்ரம் தைஸ்தை ரநு
குணைர் பாவைர் யாஹம்
தேவஸ்ய சார்ங்கிண: ।
கரோமி ஸகலம் க்ருத்யம்
ஸர்வபாவாநுக காமிநீ ॥

(பொருத்தமான அந்தந்த தன் மைகளோடு கூடி, நான் சார்ங்க ராஜனை எல்லாத்தன்மைகளி லும் பின்தொடர்பவளாய் எல் லாக் காரியங்களையும் செய்கி றேன்) என்றும் பேசியுள்ளது.

ஆழ்வார்கள் பிராட்டியை எம் பெருமானிடமிருந்து, மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல டிகள், (திருவாய் 1.3.1) 'தன் னொடுப் பிரிவில்லாத திருமகள்' (பெரிய திரு. 4.5.5) என்றும் ஸ்வரூபத்தால் பிரிக்கமுடியாத தன்மையையும்,

"என் திருமகள் சேர்மார்பனே" (திருவாய் 7-2-9) 'திருமார்பி னில் சேர்திருமாலே' (திருவாய் 9-4-1) 'அலர்மேல்மங்கையுறை மார்பா' (திருவாய் 6-10-10) 'திரு மகளும் கூறுளும் தனியுடம்பன்' (திருவாய் 4.8.1) என்றும் ரூபத் தால் பிரிக்கமுடியாத தன்மை யையும்.

"நிகரில் புகழாய்" (திருவாய் 6-10-10) "மிகும் திருமால் சீர்க் கடலை" (பெரிய திரு. 69) என்றும் குணங்கள் அபிவிருத் தியாகும் தன்மையையும்

"திருமால் வைகுந்தம்" (திரு வாய் 10-7-8) என்று நித்யவிபூ தியிலிருக்கும் தன்மையையும்

"திருமால்கடல்" (மூன்று. திரு. 30) மாதவா! கூனே சிதைய உண்டைவில் நிறத்தில் தெறித் தாய் கோவிந்தா! (திருவாய். 1-5-5) "சீமாதவன் கோவிந்தன்" (திருவாய் 8-2-7) திருமால் வந்து என் நெஞ்சு நிறையப் புகுந் தான் (திருவாய் 1-8-1) வேங்க டத்தென் திருமால்" (நா.தி. 8-10) என்று வ்யூஹ, விபவ அந்தர்யாமி, அர்ச்சை முதலிய நிலைகளில் பிரியாத தன்மை யையும்'

"பூம்பாவை யாகம் புணர்வது இரவரவர் முதலும் தானே" (திருவாய் 2.8.1) 'அல்லி மலர் மகள் யோக மயக்குக்கள் ஆகி யும் நிற்கும் அம்மான்... எல்லாக் கருமங்களும் செய்' (திருவாய் 3-10-8) என்றும் ஜகத் ஸ்ருஷ் டியில் உள்ள தன்மையையும் பேசியுள்ளார்கள்.

திருமகள் : யாமுநாசாரியரே! எனக்கு எத்தனை ஆகாரங்கள் உண்டு என்று தெரிவிக்கவில் லையே.

யாமுநாசாரியர் : கமல மேவு திருவே!

ஆகாரத்ரய ஸம்பந்நாமரவிந்த
நிவாஸிநீம் ।
அசேஷ ஜகதீ ஸித்ரீம் வந்தே
வரத வல்லபாம் ॥

(சேஷித்வ, புருஷாகாரத்வ, ப்ராப்யத்வங்களாகிற மூன்று ஆகாரங்களையுடையவள். தாம ரையில் வஸிப்பவள். எல் லாவுலகுக்கும் ஈச்வரி. வரத னுக்கு பிரியையுமான தேவியை வணங்குகிறேன்) என்று தெரி விக்கிறேன்.

பங்கய பூவிற் பிறந்த பாவை
நல்லாள் வாழியே
பங்குனியில் உத்திரநாள்
பாருதித்தாள வாழியே ✪

## அர்ச்சனா அனந்த்ர தரிசனம்

திருமலைக் கோயிலில் நாளும் நடைபெறும் அர்ச்சனைக்குப் பிறகு அதாவது காலை 5-30 மணி அளவில், ஏழுமலையானைத் தரிசித்திடும் வகையில் 'அர்ச்சனா அனந்த்ர தரிசனம்' எனும் புதிய ஆர்ஜித சேவை 1-3-96 முதற்கொண்டு ஒரு பரிசோதனை அளவில், புகுத்தப்பட்டுள்ளது. இச்சேவை பற்றிய விவரங்கள் பின்வருமாறு:-

1) கட்டணம் ரூ. 100/- (நபர் ஒருவர்க்கு)

2) இச்சேவைக்கான சீட்டுகளை வாங்கிய பக்தர்கள், அர்ச்சனைக் காக கட்டணம் செலுத்தி பங்கேற்கும் பக்தர்களின் ஏழுமலை யானின் தரிசனத்திற்குப் பிறகு, அதாவது காலை 5-30 மணி அளவில் அனுமதிக்கப்படுவர்.

3) இச்சேவைக்காகக் கோயிலில் ஒதுக்கப்படும் கால அளவு சுமார் 30 அல்லது 45 நிமிடங்களேயாகும்.

4) கோயிலில் நடைபெறும் சிறப்பு நிகழ்ச்சிகளின் அவசியத்தைப் பொறுத்து, இச்சேவைக்கான அனுமதி சீட்டுகளின் விற்பனை ஒரு நாளைக்கோ அல்லது சில நாட்களுக்கோ நிறுத்தி வைக்கப்படலாம்.

5) இச்சேவைக்கான அனுமதிசீட்டுகள் நாள் முழுவதும் திருமலை விஜயா வங்கி விற்பனைக்கூடுகளில் விற்பனைக்குக்கிடைக்கும். நாள் ஒன்றிற்கு 750 சீட்டுகள் மட்டுமே விற்கப்படும்.

# ஸ்தோத்ர மந்த்ர ஸ்லோகம்

திரு. கே.ஆர். கிருஷ்ணமாச்சாரி - ஈரோடு.

அகிலாண்டகோடி ப்ரஹ்மாண்டநாயகனான இறைவனை, அருள்பெறவும் இறைவனோடு நம்மை தொடர்பு படுத்திக் கொண்டு நலம்பெறவும் நாம் அன்றாடம் அவனைத் தொழுகிறோம். அவ்வாறு துதிக்கும்போது அவரவர் விருப்பத்திற்கேற்ப இறைவனோடு நாம் பேசுகிறோம். ஆம் பேசுகிறோம். அவ்வாறு பேசும்போது சில வார்த்தைகளை உச்சரிக்க வேண்டுமல்லவா? அவைகளைத்தான் சந்தஸ் எனும் யாப்பின் அடிப்படையில ஸ்தோத்ரம், மந்த்ரம், ஸ்லோகம் என்று கூறுகிறோம்.

ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் என்று கூறுகிறோம். ஸ்ரீகாய்த்ரி மந்த்ரம் என்று சொல்கிறோம். ஸ்ரீபகவத் கீதா ஸ்லோகம் என்று இயம்புகிறோம். இதனை நாம் மாற்றிச் சொல்வதில்லை. மூன்றுமே இறைவனோடு தொடர்புபடுத்துவது தானேயென்று மாற்றிக்கூற இயலாது. ஸ்தோத்ரம், மந்த்ரம், ஸ்லோகம் என்றால் என்ன?



**ஸ்தோத்ரம் :**

இறைவனாகிய தேவதா மூர்த்திகளைக் குறித்த புகழ் பாடல் ஸ்தோத்ரமாகிறது. இறைவனது இயல்பு, தோற்றம், கருணை, அருள், சாதனை, எளிமை, இனிமை முதலாவனவை ஸ்தோத்ரத்தில் விவரிக்கப்படுகின்றது. ஸ்தோமம், ஸ்துதி என்றாலும் ஸ்தோத்ரமே. பகவான் விஷ்ணுவின் 1000 பெயர்கள் கொண்ட விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் இதற்கு ஓர் உதாரணம் ஆகும். இது ஸஹஸ்ரநாமம், அஷ்டோத்ர ஸதம் போன்று நீண்டும் இருக்கலாம். ஸ்ரீஹனுமத் பஞ்சரத்னம் போன்று 12 வரிகளாகவும் அமையலாம். நான்கு வரியிலும் இருக்கலாம். மேலும் ஸஹஸ்ர நாமம், அஷ்டோத்ர ஸதம் மூலத்தில் ஸ்தோத்ர ரூபமாகவும் பின் அர்ச்சனை செய்வதற்கேற்ப நாமாவளிளாகவும் விளங்குகின்றது. அன்றாட வாழ்க்கையில் நாம் ஒருவரிடம் காரியத்தினை சாதித்துக்கொள்ள அவரை புகழ்கின்றோம். பாராட்டுகின்றோம். சிலர் பிரதிபலன் எதிர்பாராமல் அவ்வாறு செய்வதுமுண்டு. அதுபோன்று எல்லாம்வல்ல இறைவனது அருள்பெற நாம் அவனை புகழும் பாடல்கள்தான் ஸ்தோத்ரமாகும். பலனை எதிர்பார்த்தும் எதிர்பார்க்காமலும் அவரவர் விருப்பத்தின்படி பகவானை மக்கள் ஸ்தோத்ரம் செய்கிறார்கள்.

**மந்த்ரம் :**

'மனனாத் த்ராயதே மந்த்ரம்' என்பர். மனதால் தன்னை ஜபிப்பவனை காப்பாற்றுவது மந்த்ரமாகும். காயத்ரீ மந்த்ரம் இதற்கு ஒரு சிறந்த உதாரணமாகும். எல்லா தரப்பு மக்களாலும் அனுஷ்டிக்கப்படுவது காயத்ரீயாகும். 'ஓம் நமோ நாராயணாய'. இது அஷ்டாக்ஷர மந்த்ரமாகும். வேத மந்த்ரம் என்று கூறுகிறோம். வேத ஸம்ஹிதைகள் மந்த்ர வடிவத்தில் உள்ளன. பக்தர்கள் மஹான்களிடம் மந்த்ரோபதேசம் பெறுகின்றார்கள். மந்த்ரம் அளவில் சுருக்கமாகவும் எளிமையாகவும் விளங்குவதால் பெரும்பான்மையோரால் பெரிதும் விரும்பி அனுஷ்டிக்கப்படுகின்றது. இதனை மந்த்ரம் (MANTRAM) என்று உச்சரித்தல் வேண்டும். மந்தி

ரம் (MANDIRAM) என்று கூறி னால் திருக்கோவில் என்று பொருள்படும். மந்த்ரங்கள் குருமார்களிடம் உபதேசம் பெற்று அனுஷ்டிக்கப்படவேண்டும் என்று கூறுவார்கள். தாங்கள் மதித்து போற்றும் ஆசார்யர்கள், மஹான்கள், பெரியவர்கள், திருத்தகப்பனார் முதலியோர்களிடம் அவரவர் அபிலாஷையின்படி மந்த்ர உபதேசம் பெற்று மந்த்ர அனுஷ்டானம் செய்யலாம். 'சந்தஸாம் மாதா' எனப்போற்றும் காயத்ரீ மந்த்ர அனுஷ்டானம் மிகவும் பலன்தரவல்லது.

**ஸ்லோகம் :**

இது ஸ்தோத்ரம், மந்த்ரம் இரண்டிலிருந்து வேறுபட்டது. கீதா ஸ்லோகம், ராமாயண ஸ்லோகம் என்று கூறுகிறோம். இதற்கு செய்யுள், கவிதை, முதுமொழி என்பது அர்த்தமாகும். இது சாரணமாக அனுஷ்டுப் சந்தஸில் அமைந்திருக்கும். ஸ்ரீக்ருஷ்ணாஷ்டகம், ஸ்ரீ ஹனுமத் அஷ்டகம் போன்றவையும் இவ்வாறு அமைந்துள்ளன. இத்தகைய அஷ்டக ஸ்லோங்கள் தியான ஸ்லோகங்களாக விளங்குகின்றன. உயர்ந்த காவியங்கள், அறிநெறி இலக்கியங்கள் ஸ்லோக வடிவத்தில் பெரும்பாலும் உள்ளன.

இவ்வாறு இறைவனாகிய தேவதா மூர்த்திகளை நாம் தொடர்புகொள்ளும் பேச்சு முறை ஸ்தோத்ரம், மந்த்ரம், ஸ்லோகம் என்று மூன்று வகையாக உள்ளன. ஹிந்துக்கள் அனைவரும் ஒவ்வொருவரும் தங்கள் குல, இஷ்ட தேவதா மூர்த்திகளை குறித்த ஸ்தோத்ர, மந்த்ர, ஸ்லோகங்களை அவசியம் கற்று அவற்றினை அன்றாடம் அனுஷ்டித்து வரவேண்டும். அதன்மூலம் நாம் பகவானின் அருள் பெற்று இக, பர நலம் பெறலாம். ❖




தி.தி. தேவஸ்தானத்தாரின்

## ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்.

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்:

காலை

5-00 முதல் 5-30 வரை -- சுப்ரபாதம்
5-30 „ 6-00 வரை --ஸகஸ்ரநாம அச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)
6-00 „ 6-30 வரை --சுத்தி--முதல்மணி
6-30 „ 11-30 மதியம்--ஸர்வதரிசனம்
11-30 „ 12-30 „ --சுத்தி 2-வது மணி
12-00 „ 6-00 மாலை--ஸர்வதரிசனம்
6-00 „ 6-30 „ --சுத்தி, 3-வது மணி
6-30 „ 9-15 „ இரவு--ஸர்வதரிஸனம்
9-15 „ 9-30 „ --சுத்தி, ஏகாந்தசேவை.

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

7-00 முதல் 8-00 வரை --அபிஷேகம் (ரூ.100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
8-00 முதல் 8-00 „ --அபஷேக தரிசனம்
(ரூ. 5/-நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்--சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | ஆர்ஜித சேவைகள் |
|---|---|---|
| (அ) பொங்கல் | „ ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம்ரூ. 63-00 |
| (ஆ) புளியோதரை | „ ரூ. 100/- | (ஆ) யானை வாகனம்ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | „ ரூ. 75/- | (இ) தோலோற்சவம்ரூ. 160/- |
| (ஈ.) கேஸரிபாத் | „ ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | „ ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை ரூ.2000/- (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளி டாலர் கொடுக்கப்படும். |
| (ஊ) தோசை | „ ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய |
| (எ) ஸாகரபாத் | „ ரூ. 150/- | விரும்பும் பக்தர்கள் அதற்கான |
| (ஏ) ஸீரா | „ ரூ. 300/- | ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலே வாங்கிக்கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) |

* திருப்பதியிலிருந்து 5 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதிகளுண்டு.

# ஆர்ஜித சேவை விவரங்கள்

## (1) நாள் சேவைகள்

| சேவையின் பெயர் | கட்டணத்தொகை ரூ. | அனுமதிக்கப்படும் நபர்களின் எண்ணிக்கை | அனுமதி நேரம் காலை |
|---|---|---|---|
| 1) சுப்ரபாத தரிசனம் | 100-00 | 1 | 2-30 ,, |
| 2) தோமாலா | 200-00 | 1 | 3-30 ,, |
| 3) அர்ச்சனை | 200-00 | 1 | 4-30 ,, |
| 4) தோமாலா மற்றும் அர்ச்சனை (வெள்ளிக்கிழமைகளில்) | 400-00 | 1 | 6-30 ,, |
| 5) அமந்த்ரணோத்ஸவம் (வெள்ளிக்கிழமைகளில் நடைபெறுதது | 600-00 | 1 | 3-30 ,, |
| வெள்ளிக்கிழமைகளில் நடைபெறுவது | 600-00 | 1 | 6-30 ,, |
| 6) நிஜபாத தரிசனம் (வெள்ளிக்கிழமைகளில்) | 100-00 | 1 | 5-30 ,, |
| 7) சிறப்பு நுழைவு தரிசனம் | 30-00 | 1 | ஸர்வ தரிசனம் அனுமதியின் போது |
| 8) ஏகாந்த சேவை | 100-00 | 1 | இரவு 10-30க்குப் பிறகு. |

குறிப்பு :

(1) எண் 1 முதல் 6 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பாகவே முன்பதிவு செய்துகொள்ளலாம்.

(2) ஏகாந்த சேவைக்கும், சிறப்பு நுழைவு தரிசனத்திற்கும் முன்பதிவு கிடையாது.

(3) ஸர்வ தரிசனத்திற்குப்பிறகு கிடைக்கும் நேரத்தைப் பொறுத்து, இரவு 10-30 மணிக்குப் பிறகு ஏகாந்த சேவைக்கான அனுமதிச் சீட்டுக்கள் விற்கப்படும்.

## (2) நாள் உத்ஸவங்கள்

### 1) கல்யாணோத்ஸவம் :

ரூ. 2500/- காலை 10-00 மணிக்கு 10 நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : மேல் துணி (உத்தரீயம்) மற்றும் ஒரு இரவிக்கைத் துண்டு, 15 பெரிய லட்டுகள், 15 வடைகள், 10 அப்பங்கள், 10 தோசைகள், சர்க்கரைப் பொங்கல், புளியோதரை, தத்யோதனம் (ஒவ்வொன்றும் 1/16 சோலா அளவு)

### 2) பிரத்யேக கல்யாணோத்ஸவம் :

ரூ. 750/- காலை 10-00 மணிக்கு 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : மேல உத்தரீயம், ஒரு இரவிக்கைத் துண்டு, ஒரு பெரிய லட்டு, ஒரு வடை.

### 3) ஆர்ஜித பிரம்மோத்ஸவம்

ரூ. 500/- (நாள ஒன்றிற்கு) மதியம் 1 மணிக்கு 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர். அனுமதிக்கப்படும் வாகனங்கள் 1) பெரிய சேஷ வாகனம், 2) வெள்ளி சிறிய கருட வாகனம் 3) வெள்ளி அனுமார் வாகனம்.

### 4) தோலோத்ஸவம்/ஊஞ்சல் சேவை :

ரூ. 750/- மதியம் 1-30 மணிக்கு 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர். கோயிலுக்குள் உள்ள கண்ணாடி அறையில் இச்சேவை நடைபெறும்.

**அன்பளிப்பு** : சேஷ வஸ்தரம்

### 5) வசந்தோத்ஸவம் :

ரூ. 3000/- (நாள் ஒனறிறகு) மதியம் 2-00 மணிக்கு 10 நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : வஸ்தரம், 6 வடைகள், 20 தோசைகள், தத்யோதனம், புளிஹோரை, பொங்கல் சர்க்கரைப் பொங்கல்.

### 6) ஸகஸ்ர தீபாலங்கார சேவை :

ரூ. 500/- மாலை 5-30 மணிக்கு கோயிலுக்கு வெளியே நடைபெறும் சேவைக்குப்பிறகு 5 நபர்கள் வைகுண்டம் 'வரிசை' கட்டிடம் வழியாகத் தரிசனத்திற்கு அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு** : வஸ்தரம்.

முற்கூறிய சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே முன்பதிவு செய்து கொள்ளலாம்.)

## வருடாந்திர உத்ஸவங்கள் மற்றும் சேவைகள்

### 1) பவித்ரோத்ஸவம் :

ரூ. 5000/- மூன்று நாட்கள் நடைபெறும். பொதுவாக இந்த உத்ஸவம் ஒவ்வொரு ஆண்டும் ஆகஸ்ட மாதத்தில் நடைபெறும். நிகழ்ச்சிகளுக்கு ஐந்து நபர்கள் அனுமதிக்கப்படுவர். கோயில் அலுவலக வசதியைப் பொறுத்து, இரண்டு நபர்கள் ஒரு நாளைக்கு தோமால

சேவைக்கும் அர்ச்சனைக்கும் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு :** இரண்டாம் நாள்: 30 தோசைகள், பொங்கல். மூன்றும் நாள்: 30 தோசைகள், பொங்கல், நான்காம் நாள் 6 வடைகள் மற்றும் வஸ்த்ரம்.

**2) புஷ்ப யாகம் :**
ரூ. 3500/- (ஒருநாளைக்கு) காலை 6-00 மணிக்கு: பிரம்மோத்ஸவத்திற்குப் பிறகு ஸ்ரவண நட்சத்திர நாளன்று ஒரு நாளைக்கு இந்த உத்ஸவம் நடைபெறும்.

**அன்பளிப்பு :** வஸ்த்ரம், ஒரு தங்கக்காசு

**3) தெப்போத்ஸவம் :**
ரூ. 2500/- (நாள் ஒன்றிற்கு) மாலை 6-00 மணிக்கு வருடந்தோறும் பிப்ரவரி - மார்ச்சு மாதத்தின்போது ஐந்து நாட்களுக்கு இவ்விழா நடைபெறும். ஐந்து நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு :** மேல் உத்தரீயம் மற்றும் இரவிக்கைத்துண்டு.

**4) பத்மாவதி பரிணயம் :**
ரூ. 5000/- நபர் ஒருவர்க்கு: மாலை 3-00 மணிக்கு: ஆண்டுதோறும் மூன்று நாட்களுக்கு, பொதுவாக ஜூன் மாதத்தில் நடைபெறும். ஐந்து நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு :** வஸ்த்ரம், இரவிக்கைத்துண்டு, ஐந்து லட்டுகள், ஐந்து வடைகள்.

**5) அபிதேயக அபிஷேகம் :**
ரூ. 2000/- (நபர் ஒருவர்க்கு) காலை 8-00 மணிக்கு: ஆண்டுதோறும் பொதுவாக ஜூன் மாதத்தில் மூன்று நாட்களுக்கு நடைபெறும். ஐந்து நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு :** மேல் உத்தரீயம், இரவிக்கைத் துண்டு, ஒரு லட்டு, ஒரு வடை.

**6) புஷ்ப பல்லக்கு :**
ரூ. 1000/- மாலை 5-30 மணிக்கு: ஆண்டுதோறும் ஜூலை மாதத்தில் ஆனிவார ஆஸ்த்தானத்தின் போது நடைபெறும். ஐந்து நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு :** மேல் உத்தரீயம், இரவிக்கைத் துண்டு, ஒரு லட்டு, ஒரு வடை.

**7) கோயிலாழ்வார் திருமஞ்சனம் :**
ரூ. 3000/-. காலை 11-00 மணிக்கு: ஆண்டுக்கு நான்கு முறைகள் வியாழக்கிழமைகளில் யுகாதி (தெலுங்கு வருடப்பிறப்பு) ஆனிவார ஆஸ்த்தானம், பிரம்மோத்ஸவம், வைகுண்ட ஏகாதசி ஆகிய முக்கிய நிகழ்ச்சிகளுக்கு முன்பு நடைபெறும். 10 நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

**அன்பளிப்பு :** வஸ்த்ரம், 15 லட்டுகள், 15 வடைகள், 10 அப்பங்கள், 10 தோசைகள் மற்றும் அன்னபிரஸாதங்கள்.

**குறிப்பு :** சேவை டிக்கெட்டுகள் கிடைப்பதைப் பொறுத்து இந்த வருடாந்திர சேவைகளுக்கு முன்பதிவு செய்யப்படும்.

## பொதுத் தகவல்கள்

1) குறிப்பிட்ட சேவைக்கான தொகையினை "செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி" (Executive Officer, T.T. Devasthanams, Tirupati.) எனும்பெயரில் கோடிட்ட வங்கி காசோலை எடுத்து, அதனை "பெயிஷ்கார், திருமலைக்கோயில், திருமலை-517504" என்ற முகவரிக்கு ஒரு விண்ணப்பத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் வேண்டும். இதனை தேவையான நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்புதல் வேண்டும். அந்தந்த சேவைகளுக்குத் தனித்தனியாக விண்ணப்பிக்க வேண்டும். தேவையான சேவைகள் கிடைப்பதைப் பொறுத்து முன்பதிவு செய்யப்பட்டு, உறுதிமடல்அனுப்பப்படும்.

2) தேவையான இடவசதிகளுக்காக, அதற்குரிய கட்டணத்தொகையானது, "செயலாட்சித்தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி" எனும் பெயரில் கோடிட்ட வங்கி காசோலை மூலமாகப் பெறப்பட்டு அதனை நாள், நபர்கள் ஆகிய தகவல்களுடன் கூடிய விண்ணப்பக் கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) இணைத்து, அவற்றை 30 நாட்களுக்கு முன்பாக (அப்போதுதான் முன்பதிவு உறுதிமடல் அனுப்ப ஏதுவாக அமையும்.) "Assistant Executive Officer, Reception I - T.T.D., Tirumala-517504" எனும் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

3) மேலும் தகவல்களுக்கு "செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி-517501" அல்லது பெயிஷ்கார், திருமலைக்கோயில், திருமலை-517504 எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

4) நன்கொடையாளர்கள், சேவை செய்பவர்கள், உத்ஸவங்களில் பங்குபெறுவோர் யாவரும் திருமலை வைகுண்டம் 'க்யூ' கட்டிடம் வழியாக அனுமதிக்கப்படுவர்.



Published on behalf of T.T.Devasthanams by N.S. Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D. Press by M. Lakshmana Rao, B.A., L.P.T., T.T.D. Press, Tirupati - 517 507

